Ramanathapuram district, and molesting womenfolk including removal of thalis and giving protection to the rowdies who attacked the peasants.'

MR. SPEAKER : When did this happen?

SRI M. KALYANASUNDARAM : Between 10th and 14th of this month. Even now the Police are camping there and the trouble is not yet over.

MR. SPEAKER : I must bring to the notice of the hon. Member that the matter must be a matter of urgent public importance. It may be, that this matter may be a matter of public importance but it is not urgent because it took place between the 10th and 14th instant. How can the hon. Member move an adjournment motion on the 23rd instant, that is to-day? I would very strongly advise him to give notice of a short notice question.

SRI M. KALYANASUNDARAM : Still there is harassment by the Police.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, we have no information about the allegations made by the hon. Member. Simply because the hon. Member has raised the matter on the basis of some information he received from his party office, and made certain allegations, it should not be thought that because they are not contradicted they are true. If the hon. Memeber is interested, he can give notice of a short notice question.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் சபாநாயகர் அவர்களே, நான் ஒரு மாதத்திற்கு முன்பு மானாமதுரைக்குப் போயிருந்தபோது, இந்த கிராமத்தில் சில பலாத்கார நடவடிக்கைகள் நடத்தப்படுகின்றன, போலீஸும் கேட்பதில்லை என்று புகார் செய்தார்கள். இன்றைய தினம் பத்திரிகைகளில் சில தகவல்கள் வந்திருப்பதை கனம் அங்கத்தினர்கள் பார்த்திருப்பார்கள். அதைப்பற்றி என்னிடம் இப்போது தகவல் இல்லை. கனம் அங்கத்தினர் பழனிசாமி அவர்கள் குறுகிய காலக் கேள்வியொன்று கொடுத்திருக்கிறார். அதற்கு சீக்கிரத்தில் தகவல் சேகரிக்கப்பட்டு பதில் அளிக்கப்படும். ஆகையால் இந்த அவசரப் பிரேரணைக்கு அவசியமில்லை என்று நினைக்கிறேன்.

MR. SPEAKER : I think the hon. Member can accept the suggestion of the Hon. Minister. I rule his adjournment motion out of order.

## III.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS WAKF (SUPPLEMENTARY) BILL, 1961.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I beg leave to introduce the Madras Wakf (Supplementary) Bill, 1961.

23rd February 1961]

MR. SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Madras Wakf (Supplementary) Bill, 1961.'

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

(2) THE LAND ACQUISITION (MADRAS AMENDMENT) BILL, 1961.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I beg leave to introduce the Land Acquisition (Madras Amendment) Bill, 1961.

MR. SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Land Acquisition (Madras Amendment) Bill, 1961.'

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

(3) THE MADRAS STATE HOUSING BOARD BILL, 1961
(L.A. BILL NO. 31 OF 1960)—*cont.*

*Clause* 7.

* THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, yesterday a number of amendments were accepted in this House. We have examined those amendments and a few consequential amendments have become necessary by reason of the acceptance of those amendments. Therefore, I now move—

'That clause 7 be reopened.'

The motion was put and carried and clause 7 was reopened.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move the following amendment to clause 7 :—

"In sub-clause (1), item (*a*) *omit* the word 'either'."

Yesterday the House accepted the amendment of the hon. Member, Sri Kalyanasundaram, deleting the words "or in respect of the offence committed he has been pardoned". Consequently, the word 'either' occurring in the clause is superfluous and in fact it would be wrong to retain it. Therefore, the word 'either' may be omitted.

MR. SPEAKER : The question is—

"In sub-clause (1), item (*a*) *omit* the word 'either'."

The amendment was put and carried.

Clause 7 as amended was put and carried.

*Clause* 30.

THE HON. SRI R. VENKATARAMAN : I move—

' That Clause 30 be reopened '.

The motion was put and carried and Clause 30 was reopened.

THE HON. SRI R. VENKATARAMAN : I move the following amendment :—

" In clause (*b*) of the proviso, for the words ' such directions as it may deem fit ', *substitute* the words ' such directions as it or they may deem fit '."

It is only a verbal alteration.

SRI S. LAZAR : On a point of order, Sir. In clause 30 I do not find the words " such directions as it may deem fit."

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the hon. Member is looking at the original clause.

MR. SPEAKER : Yesterday the House accepted the amendment of the hon. Member, Sri Srinivasa Ayyar, and in that amendment those words are included.

The question is—

" In clause (*b*) of the proviso, *for* the words ' such directions as it may deem fit ', *substitute* the words ' such directions as it or they may deem fit '."

The amendment was put and carried.

Clause 30 as amended was put and carried.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

' That the Madras State Housing Board Bill, 1961 (L.A. Bill No. 31 of 1960) as amended be passed.'

MR. SPEAKER : Motion moved—

' That the Madras State Housing Board Bill, 1961 (L.A. Bill No. 31 of 1960) as amended be passed.'

* SRI R. SRINIVASA IYER : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவானது 162 ஷரத்துக்களுடன் ஒரே நாளில் அதுவும் கூட 1½ மணிவரைகூட விவாதிக்கப்படாமல் வெகு சீக்கிரத்திலே முடிவடைந்துவிட்டது. தவிர, இவ்வளவு பெரிய மசோதா செலக்ட் கமிட்டியில்கூட ரொம்பவும் குறுகிய காலத்திலே

23rd February 1961] [Sri R. Srinivasa Iyer]

முடிந்திருக்கிறது. அதே நேரத்திலே, இந்த மசோதா ஒரு பெரிய மகத்தான சேவை செய்யக்கூடிய ஒரு சட்டம். ஏராளமான சக்தி, பொருளாதார உதவி, பணத்தை இஷ்டப்படி விநியோகம் செய்யக்கூடிய ஒரு பவர் ஆகிய இவைகளைக் கொண்டுள்ள அதிகாரங்களுடன் கூடிய ஒரு போர்டு நியமிக்கப்பட்டு, சென்னை மாகாணம் பூராவும் சேவை செய்யப்போவதாக செய்யப்பட்ட ஒரு சட்டம். இதிலே பல விதிகளிலே போர்டு சர்க்காருடன் சேர்ந்து செய்யவேண்டிய கடமைகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. சென்னை ராஜ்யத்திலே வீட்டு நெருக்கடி தீரவேண்டுமானால், எவ்வித காலதாமதமும் இல்லாமல் இந்தச் சட்டத்தில் கண்டுள்ளபடி வெகு சீக்கிரத்திலே இது நிறைவேற்றப்படவேண்டும். நேற்று இதைப்பற்றி விவாதம் நடந்தபோது, நில ஆர்ஜித சட்டம் 1 ஆப் 1894படி செய்தால், காலதாமதமாகும் என்று விவாதித்தோம். கனம் மந்திரி அவர்கள், அதற்குச் சட்டத்தைத் திருத்துவதற்கு சீக்கிரத்திலே நில ஆர்ஜித மசோதா கொண்டு வரப்படும் என்று அறிவித்தார்கள். இன்றைக்கு அஜண்டாவிலே, நில ஆர்ஜித சட்டத்திருத்த மசோதாவை கனம் ரெவின்யூ மந்திரி அவர்கள் பிரரேபிக்கப்பட இருக்கிறதைப் பார்க்க, இது வெகு சீக்கிரத்திலே ஏற்பட்டு, அதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படுமென்று நம்ப வேண்டியிருக்கிறது.

(Sri V. Subbiah in the Chair).

ஆனால் ஒரு விஷயம் மட்டும் கேட்டுக்கொள்கிறேன். இந்தத் திருத்தமானது வெகு காலமாகவே வரப்படுமென்று எதிர்பார்க்கப்பட்டிருக்கும். இதை இப்போது இந்த பட்ஜெட் கூட்டத்தில் விவாதிப்பதென்றால், காலதாமதம் ஏற்படலாம். ஆகவே பட்ஜெட் செஷன் முடிவடைவதற்குள், உடனடியாகவே அதை விவாதத்திற்கு எடுத்துக்கொண்டு, ஒரு பொறுக்குக் கமிட்டிக்கு விட்டு, அவுசிங் போர்டு மசோதா எவ்வளவு சீக்கிரத்தில் முடிவெடுக்கப்பட்டதோ அதைப்போல், இந்த பட்ஜெட் செஷன் முடிவதற்குள் இந்த மசோதாவை நிறைவேற்றி விடவேண்டுமென்று நான் சம்பந்தப்பட்ட சர்க்கார் அமைச்சர்களைக் கேட்டுக்கொள்கிறேன். அப்படி இல்லாவிட்டால், இந்த அவுசிங் போர்டு சட்டம் இவ்வளவு அவசரமாக விவாதித்து முடிவெடுக்கப்பட்டபோதிலும், அதன் பலன் நமக்கு கிடைக்காது.

இன்னும் இந்தச் சட்டம் வீடுகள் கிடைப்பதில் இருக்கக்கூடிய நெருக்கடியைத் தீர்ப்பதற்காக என்ற அபிப்பிராயத்தோடு நிறைவேற்றப்பட்டிருப்பதால், சென்னை நகரத்தைப் பற்றி மட்டும் அக்கறை எடுத்துக்கொள்ளாமல், வழக்கம்போல் நகரங்களையே செப்பனிட்டுக்கொண்டு கிராமாந்திரங்களை புறக்கணித்து வருவதுபோல் இல்லாமல், மற்றும் முக்கியமான முதல்தர பஞ்சாயத்துக்களுக்கும் அதாவது டவுன் பஞ்சாயத்துக்களுக்கும், முனிசிபாலிடியாககூடிய அளவில் 25,000 ஜனத்தொகையும், 1,50,000 ரூபாய் ரெவின்யூ வரக்கூடிய பஞ்சாயத்தாக இருந்தாலும் முனிசிபாலிடி ஆக்கப்படாமல் இருந்தாலும்கூட, அப்படிப்பட்ட இடங்களில் உள்ள வீட்டு நெருக்கடிகளைத் தீர்ப்பதற்காக இந்த

அவுசிங் போர்டு உடனடியாக கூட்டம் கூடி, அந்தந்தப் பஞ்சாயத்து எல்லைக்கும், அருகாமையிலே இருக்கக்கூடிய இடங்களுக்கும் திட்டங்கள் ஏற்படுத்தி, ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒரு அவுசிங் யூனிட்டு ஏற்படுத்தி, ஒவ்வொரு ஜில்லாவிலும் இந்த அவுசிங் யூனிட்டுகள் உடனடியாகக் கூடி விவாதிக்க இந்த போர்டின் அதிகாரிகள் உடனடியாக நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும். அதோடு நான்-அபிஷியல் மெம்பர்களின் கூட்டத்தையும் கூட்டி, அந்தந்தப் பிராந்தியங்களில் இத் திட்டங்களை நிறைவேற்றுவதற்காக தீவிரமான நடவடிக்கை எடுத்துக் கொண்டால், இந்த வீட்டு வாடகை ஏறிக்கொண்டே போவதும், விலை ஏறிக்கொண்டே போவதையும் தடுப்பதற்கான ஒரு நிவாரணம் ஏற்படும். ஸ்தலம் அபிவிருத்தி ஸ்கீமுக்கு மட்டும் இதை அமுலுக்கு கொண்டு வருவது கூடாது.

(Mr. Speaker in the Chair.)

அது ஒருபுறமிருக்க, கிராமங்களிலேகூட பஞ்சாயத்திற்கு உட்பட்ட எல்லைக்குள் இருக்கக்கூடிய இடங்களிலே இந்த வீடுகள் கட்டுவதில் சில கஷ்டங்கள் இருப்பதால், அதற்கும் தகுந்த நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்த போர்டிலே உத்தியோகஸ்தர்கள் நியமிப்பதற்கு சேர்மனுக்கும், போர்டுக்கும் அதிகாரம் உண்டென்றும், ஆயிரத்திற்கு மேற்பட்ட வருமானமுள்ள உத்தியோகஸ்தர்களை நியமிக்க போர்டு சர்க்காருக்கு அனுப்ப வேண்டுமென்றும் அதிகாரம் கொடுக்கப்பட்டு இருக்கிறது. தவிர, உத்தியோகஸ்தர்கள் நியமிப்பதில், பப்ளிக் சர்விஸ் கமிஷன் மூலம் இந்த உத்தியோகஸ்தர்களை நியமித்தால், ரொம்பவும் காலதாமதமாகும் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இது உண்மை தான். ஆனாலும்கூட, இந்த அதிகாரிகளை நியமிப்பதில் நல்ல கண்காணிப்போடு, எல்லா வகுப்பினருக்கும் ரெப்ரசென்டேஷன் இருக்கும் வகையிலே, பாக்வேர்ட் கம்யூனிடிகளால் எந்தவித ஆட்சேபணையும் இல்லாத முறையில், அந்தந்த நியமனங்களைச் செய்யும்படி சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, இந்த டெபர்ட் தெரு ஸ்கீம் இருக்கிறதே, அது ஒரு பெரிய வேலை. இவைகளை நிறைவேற்றப்படுவதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. நேற்றுகூட பேசும்போது, சாந்தோமில் இருக்கக்கூடிய நெருக்கடியைப் பற்றி கூறப்பட்டது. இந்நிலைமை முனிசிபாலிடிகளிலும், டவுன் போன்ற இடங்களிலும்கூட இருக்கிறது. ஆனால் இந்தக் கஷ்டங்கள் இருக்கிறதே என்று சொல்லிக்கொண்டு வந்தால், இன்னும் காலதாமதமாகிக் கொண்டுதான் வரும். அதனால் இந்த டெபர்ட் தெரு ஸ்கீமை நிறைவேற்றப்படாமல் போய்விடும். ஆங்கிலத்திலே, "It is good to have giant's strength. But to use it like a giant is tyrannous என்று சொல்வார்கள். இந்த டெபர்ட் தெரு ஸ்கீமை நிறைவேற்றுவதில் பல கஷ்டங்கள் இருந்தாலுங்கூட, உடனடியாக இப்பிரச்னையைத் தீர்க்க ஓரளவு அதிக காம்பன்சேஷன் கொடுக்க

23rd February 1961] [Sri R. Srinivasa Iyer]

வேண்டி வந்தாலும் கொடுத்து, இத்திட்டத்தை நிறைவேற்ற வேண்டும். இருபது வருஷம் என்று தள்ளிப் போட்டு விடாமல், சீக்கிரத்திலே இத்திட்டத்தை நிறைவேற்ற ஜனங்களுக்கும், வீடுகளுக்கும் அதிக பாதகம் ஏற்படாத முறையிலே சில பகுதிகளை இடித்துத் தள்ள வேண்டுமென்றாலும், இடித்துத் தள்ளி சீக்கிரத்திலே இந்த ஸ்கீமை நிறைவேற்றும்படி கேட்டுக்கொள்கிறேன்.

எப்போதும் சட்டங்களுக்கு ரூல்கள் கொண்டு வருவதிலே காலதாமதம் ஏற்படுகிறது. 1939-ம் வருஷத்திலே செய்யப்பட்ட சட்டத்திற்கு 1960-ம் வருஷத்தில் விதிகள் வருகின்றன. இந்த விதிகளை மாற்றும்படி சொல்லியிருக்கிறோம். இந்த விதிகள் எப்போதும் ஒரு சட்டம் அமுல் செய்யும்போது, அதோடு உடனடியாகச் செய்யவேண்டும். அதனாலே இந்தச் சட்டமும் அதற்கான விதிகளும் சீக்கிரம் நிறைவேற்றப்படவேண்டும். அதாவது இச்சட்டம் கவர்னருக்கும், பிரசிடெண்டுக்கும் போய் வருவதற்குள், அதற்கான விதிகளைத் தயாராகச் செய்து, சட்டம் என்று அமுல் செய்யப்படுகிறதா, அன்றே விதிகளையும் அமுலாக்க வேண்டும். அப்படிப் பண்ணினால்தான் நல்லது. இது ரொம்ப முக்கியமான விஷயம், உரிமையை பாதிக்கக்கூடிய விஷயம். இல்லாவிட்டால், ஹைகோர்டுக்கு, சுப்ரீம் கோர்டுக்கு என்று ரிட் போட்டுக் கொண்டிருக்கக் கூடிய நிலைமை ஏற்படும். அதனால், வீட்டு வசதியை நாம் எவ்வளவு சீக்கிரத்தில் அடைய வேண்டுமென்று நினைக்கிறோமோ, அதன் பலன் கிடைக்காமல் போய்விடும். இதற்கு விதிகளை உடனடியாகத் தயாரித்தாக வேண்டும். இந்த விதிகளைப் பற்றி அடிக்கடி சப்பார்டினேட் லெஜிஸ்லேஷன் கமிட்டிக் கூட்டத்தில் பேசி இருக்கிறோம். ஆகவே இது சீக்கிரம் அமுலாக்கப்பட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

பெட்டர்மெண்ட் பீ லெவியைப் பற்றி இந்த போர்டுக்கு அதிகாரம் இருக்கிறது. அதைப்பற்றி டிரிப்யூனலிலுள்ள சபார்டினேட் ஜட்ஜுக்கு மேலதிகாரம் கொடுக்கப்பட்டிருப்பது வாஸ்தவம்தான். இந்த பெட்டர்மெண்ட் பீலெவி செய்வதில்கூட இந்த ஸ்கீமை தாமதம் செய்தால், பின்னால் விலை அதிகமாய்விடும். இப்போது விலை ஜாஸ்தியாக நிர்ணயித்து, அதில் 1/3 பெட்டர்மெண்ட் பீயாக கொடுக்கப்பட்டு வருகிறது. அதனாலே இந்த பெடர்மெண்ட் லெவியை சீக்கிரமாக நிறைவேற்றி, உடனடியாக விலை நிர்ணயம் செய்தால், இப்போது கட்டுவதைப்போல் அதிகப்படியான தொகை கட்ட வேண்டிய நிலைமை ஏற்படாது. ஆகவே, இதை எவ்வளவு சீக்கிரமாகச் செய்யவேண்டுமோ, அவ்வளவு சீக்கிரமாகச் செய்யும்படி கேட்டுக்கொள்கிறேன்.

கோடிக்கணக்கான தொகையை சர்க்காரிடத்தில் இருந்தும் அல்லது பிறரிடத்தில் இருந்தும் டிபென்சராக எடுக்கப்பட்டு, பெரிய வேலையைச் செய்யக்கூடிய முக்கிய பொறுப்பும், அதிகாரமும் இந்த போர்டுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த போர்டுக்கு கொடுக்கப்பட்டுள்ள அதிகாரம், எலக்டிரிசிடி போர்டுக்கு கொடுக்கப்பட்டுள்ள அதிகாரத்தைவிட அதிகமானது

[Sri R. Srinivasa Iyer] [23rd February 1961

என்று நான் நினைக்கிறேன். எலக்ட்டிரிசிடி போர்டிலே அவர்கள் சம்பந்தப்பட்ட வேலைக்கு சர்க்காரிடத்திலே கடன்கள் வாங்கி; அதற்கு வேண்டிய கணக்குகளை நமக்கு பட்ஜெட் விவாதத்திற்கு வைக்கிறார்கள். நேற்று கனம் அமைச்சர் அவர்கள் பேசும்போது கூட, பட்ஜெட்டிலே இதற்கும் விவாதம் வைத்துக் கொள்ளலாம் என்று சொன்னார்கள். அப்படி இதைப்பற்றி பட்ஜெட்டிலே பேசுவது என்று சொன்னால், நமக்குக் கிடைக்கக்கூடிய 5 அல்லது 10 நிமிஷ நேரத்திலே இந்த விஷயத்தை எடுத்துக்கொண்டால், பாக்கி விஷயங்களைப் பற்றி பேசுவதற்கு முடியாமல் போய்விடுமே என்று அஞ்ச வேண்டியிருக்கிறது. எலக்ட்டிரிசிடி பட்ஜெட்டுக்கு மட்டும் தனியாக ஒருநாள் வைத்து, விவாதிப்பதுபோல் இந்த ஹவுசிங் போர்டு பட்ஜெட் எஸ்டிமேட், ரிவைஸ்ட் பட்ஜெட் எஸ்டிமேட் போன்றவைகளை இந்த சட்டசபை முன்னாலே விவாதத்திற்கு வைத்தால், எங்கெந்த இடங்களில் குறை இருக்கிறது என்பதை மக்களின் பிரதிநிதிகளாகிய சட்டசபை மெம்பர்கள் கவனித்து, அவைகளை எடுத்துச் சொல்வதற்கு ஒரு சந்தர்ப்பம் அளித்ததாக இருக்கும். இந்த போர்டிற்கு கடன் கொடுப்பதை மட்டும்தான் சர்க்கார் பட்ஜெட்டில் சொல்லு வார்கள். சர்க்கார் பட்ஜெட்டில் முழு விவரங்கள் வராது. எத்தனை கோடி ரூபாய் கடன் கொடுத்திருக்கிறார்கள் என்பதை மட்டும்தான் சொல்லுவார்கள். எங்கே ஸ்கீம் போட்டிருக்கிறார் கள் போன்ற 'டீடைல்ஸ்' வராது. ஆகவே, நான் சர்க்காரை கேட்டுக்கொள்ளுகிறேன். பட்ஜெட் விவாதத்திற்கு பிறகு, ஒரு மாதம், இரண்டு மாதம் சென்று வந்தால்கூட பரவாயில்லை, இந்த ஹவுசிங் போர்டு பட்ஜெட்டை சட்ட சபைக்கு முன்னால் விவாதத் திற்கு மட்டும் வைக்கவேண்டும்—வோட்டு எடுக்கத் தேவையில்லை —என்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

**Sri S. LAZAR**: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா சட்டமாக நிறைவேறக்கூடிய இந்த சந்தர்ப்பத்திலே ஒன்றிரண்டு முக்கியமான கருத்துக்களை நான் சொல்ல விரும்பு கிறேன். இந்த மசோதாவை அரசாங்கம் இங்கே கொண்டுவந்த பொழுது, எனக்குத் தெரிந்த வரையில் இதே போன்று ஒரு முறை மேல் நாடுகளில், அமெரிக்கா போன்ற நாடுகளில் கையாளப் படுகிறது என்று தெரிந்துதான் நமது மதிப்பிற்குரிய அமைச்சர் அவர்கள் அதே மாதிரி ஒரு திட்டத்தை இங்கு கொண்டு வந்திருக் கிறார்கள். ஆனால் அங்கு எந்த அளவிற்கு அந்த முறையானது அதிகப்படியான வீடுகளை கட்டுவதற்கு உதவியாக இருக்கிறதோ அந்த அளவிற்கு நாமும் இங்கே முயற்சி எடுக்கவேண்டும் என்பதுதான் என்னுடைய முதலான கருத்து. ஹவுசிங் போர்டு பெயர் அளவிலே நின்று விடக்கூடாது. ஏராளமான வீடுகளைக் கட்டும் நல்ல ஒரு சூழ்நிலையை அமைத்துக் கொடுக்க வேண்டியது மிகவும் அவசியமாகும். அந்த வேலையை எப்படி செய்யப் போகிறார்கள் என்பது எனக்கு உள்ளபடியே சந்தேகம் கொடுக்கிறது. காரணம், இந்த போர்டினுடைய ஒரு உருவமாக இருந்த நகர அபிவிருத்தி டிரஸ்டு சென்னை நகரத்தில் மட்டும்

23rd February 1961] [Sri S. Lazar]

தான் இயங்கிக்கொண்டு வந்தது. சென்னை நகரத்தில் மட்டும் இயங்கி வரக்கூடிய இந்த ஸ்தாபனம் ஒரு கனிசமான அளவிற்கு வீடுகளை கட்டியிருக்கிறது என்று சொன்னபோதிலும்கூட, அது தேவையான அளவிற்கு வீடுகளை கட்ட முடியவில்லை என்பதை யாரும் மறுக்க முடியாது. வீடுகளுக்கான தேவைக்கும், இவர்கள் கட்டியிருக்கக்கூடிய வீடுகளின் எண்ணிக்கையும் பார்க்கும் பொழுது எந்தவிதமான சம்பந்தமும் இல்லை என்று நான் சொல்ல முடியும். ஆகவே, மேலும் அதிகப்படியான வீடுகளை கட்ட வேண்டும் என்று சொன்னால், என்னென்ன வசதிகளை இந்த போர்டு செய்துகொடுக்கப்போகிறது என்பதைக் குறித்துத்தான் இது அமையப்போகிறது. அதோடுகூட இது எந்த அளவிற்கு அதிகப்படியான பல உதவியை அரசாங்கம் இந்த போர்டிற்கு செய்யக்கூடும் என்பதைப் பொறுத்தும் அமையக்கூடியதாக இருக்கிறது. இப்பொழுது இருக்கக்கூடிய முறையில் அவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட அளவிற்கு மட்டும் பணம் கிடைக்கும் வாய்ப்பு இருக்கிறது. அந்த அளவிற்கு மட்டும் பண உதவி கொடுத்து விட்டால் நாம் எண்ணக்கூடிய எண்ணம் நிறைவேறாது. அதிகப் படியான அளவிற்கு அவர்களுக்கு பணம் கிடைக்கவேண்டும். அதோடு பொது மக்களும்கூட இதில் நல்ல நம்பிக்கை வைத்து அவர்களுடைய பணத்தையும் ஏராளமாக வாங்கக்கூடிய அளவிற்கு நாம் வகை செய்யவேண்டியது அவசியம். அந்த அளவிற்கு பண உதவி அதிகம் கிடைக்க ஏற்பாடு செய்யப் பட்டால்தான் இந்த போர்டு நல்ல முறையில் இயங்குவதற்கு வாய்ப்பு இருக்கும். இன்னும் அந்த அளவிற்கு அதிகப்படியான வீடுகளை கட்ட முற்படக்கூடிய நேரத்திலே மற்றொரு முக்கியமான கருத்தையும் மனதில் கொள்ளவேண்டியிருக்கிறது. இவர்கள் ஏராளமான வீடுகளை குறிப்பிட்ட காலத்தில் கட்டுவதற்கு முற்படுகின்ற நோக்கில் விலைவாசிகள் ஓரளவிற்கு அதிகப்படியாக உயர்வதற்கு இவர்கள் ஏதுவாக இருக்கிறார்கள். இவர்கள் வாங்கக்கூடிய பொருள்களோ அல்லது அவர்கள் அமைத்திருக்கக் கூடிய தொழிலாளர்களோ நல்ல முறையிலே இருக்கவேண்டும் என்று சொன்னால் அவர்களுடைய ஊதியத்தை கவனிப்பதோடு கூட, அந்த வட்டாரத்திலே இருக்கக்கூடிய நிலைமையையும் சற்று அனுசரிக்கவேண்டும். ஒரு சில இடங்களில் இந்தத் திட்டம் நிறை வேறுகிற காரணத்தினால் திடீரென்று சாதாரணமாக அங்கே மக்கள் கட்டக்கூடிய வீடுகள்கூட கட்ட முடியாமல் தடைபட்டுப் போய்விடுகிறது. அதையும்கூட அரசாங்கமும், இந்த போர்டும் கவனிக்கவேண்டும். அந்த அளவிற்கு இவர்கள் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். எந்தப் பொருள்கள், எந்த சாமான்கள் வாங்கினால் விலை குறைவாக இருக்குமோ அந்த சாமான்களை வாங்கி சேகரித்து வைக்கக்கூடிய அளவிற்கு நாம் இப்பொழுது வகை செய்திருக்கிறோம். அந்த முறையை நடைமுறையில் கொண்டுவரவேண்டும். அதேபோன்று இரும்பு போன்ற பொருள் களை இந்த போர்டு ஓபன் மார்கெட்டில் மற்றவர்களோடு போட்டி போட்டுக்கொண்டு வாங்கக்கூடிய அளவிற்கு நாம் வகை செய்யக் கூடாது. அவர்களுக்கு நேரடியாக பெரிய தொழிற்சாலை களிலிருந்து கிடைக்கக்கூடிய முறையிலே ஏற்பாடு செய்து

[Sri S. Lazar] [23rd February 1961

கொடுத்தால் அவர்களுக்கும் விலே குறைவாக கிடைக்கும். அதோடுகூட மற்றவர்களுக்கும் இந்த போர்டார் பெரும் அளவிற்கு ஓபன் மார்கெட்டில் வாங்குவதினல் பாதகம் ஏற்படாமல் இருக்கும். ஆகவே, இந்த சில கருத்துக்களைக்கூட மனதில் கொண்டு இந்த போர்டு இயங்கவேண்டும்.

அதோடுகூட, முக்கியமாக கனம் சீனுவாசய்யர் அவர்கள் சொன்னதுபோல வீடு நெருக்கடி எல்லா நகரங்களிலும்தான் இருக்கிறது. குறிப்பாக திருச்சி போன்ற நகரங்களில் வீடு நெருக்கடி மிகவும் அதிகமாக இருக்கிறது. ஆனல் அந்த நெருக் கடிக்குத் தக்க அளவிற்கு வீடுகளுடைய எண்ணிக்கை அதிகரித் திருக்கிறதா என்று பார்த்தால் நிச்சயமாக இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஓரளவிற்கு வீடுகள் கட்டிக்கொண்டு வந்தாலும், தேவைக்கு ஏற்ற அளவிற்கு அங்கே வீடுகள் கட்டு வதற்கு வசதி இல்லை. அதோடுகூட புதிய வீடுகள் கட்டுவதற்கு திட்டம் அமைக்கிறபொழுது இடம் தேர்ந்தெடுக்கப்படும்பொழுது எந்த இடத்தையும் வாங்கி ஏற்றுக்கொள்ளலாம் என்ற நிலைமை மாறவேண்டும். நகர மத்தியிலே இருக்க வேண்டுமென்ற எண்ணத்திலே விவசாயப் பகுதிகள் போன்ற நல்ல இடங்களை பாழ்படுத்தக்கூடிய அளவிற்கு இந்தத் திட்டத்தைக் கொண்டு வருவது மிகவும் வரவேற்கத்தக்கது ஆகாது என்பதை சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஓரளவிற்கு நகரத்திற்கு சற்று அப்பாலும் இருக்கவேண்டும். நல்ல மேடான பிரதேசமாக இருக்கக்கூடிய இடத்தை வாங்கவேண்டும். நகர மத்தியிலே இருக்கவேண்டுமென்ற காரணத்தினல் நல்ல நஞ்சை பகுதியை அழித்து மாற்றக்கூடிய அளவிற்கு நாம் இந்தத் திட்டத்தை அமைக்கக்கூடாது. ஆகவே, இந்த விஷயத்திலும்கூட சற்று கவனம் செலுத்துவது மிகவும் அவசியமாகிறது.

அதோடுகூட இந்த சட்டத்தை அமுலுக்குக்கொண்டு வரும் பொழுது எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் சொன்னது போல விதிகளையும் உடனடியாகக் கொண்டுவரவேண்டியது மிகவும் அவசியம்.

கடைசியாக இந்த மசோதா குறுகிய காலத்தில் நிறைவேற்றப் பட்ட போதிலும், நல்ல திருத்தங்களை அரசாங்கம் ஏற்றுக் கொண்டிருக்கிறது. இந்தத் திருத்தங்களை ஒரு குறிப்பிட்ட அங்கத்தினர் கொடுத்தார் என்ற முறையிலே அவர்களையும் இந்தச் சபையின் மூலம் பாராட்டி, என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

* **SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM :** கனம் தலைவர் அவர்களே, இந்த மசோதாவை முழு மனதுடன் ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். வெகு நாட்களாக மக்கள் எதிர்ப்பார்த்திருந்த ஒரு மசோதா இது. அதிலும் சென்னை நகரத்தில் இருப்பவர்களுக்கு இம்மாதிரி சலுகைகள் நகர அபிவிருத்தி டிரஸ்டு மூலம் கிடைத்துக்கொண்டு வந்தது. அதே போன்று மற்ற மாவட்டங்களிலும் இருப்பவர்களுக்கு கிடைப்ப தற்கு ஒரு சந்தர்ப்பம் இல்லையே என்று ஏங்கிக்கொண்டிருந்தவர்

23rd February 1961] [Srimathi Rajathi Kunchithapatham]

களுக்கு வரவேற்கக்கூடிய ஒரு நல்ல அம்சத்துடன் கூடிய ஒரு மசோதா என்று கூற விரும்புகிறேன். முக்கியமாக, கனம் சீனுவாசய்யர் அவர்கள் சொன்னதுபோல், தாமதம் ஏற்படாமல் குறுகிய கால அளவிலே வீடுகள் கட்டுவதற்கு எத்தனை அளவு உதவி செய்ய முடியுமோ அத்தனையும் செய்வதற்கு இந்த போர்டு முதலில் ஏற்பாடுகள் செய்யவேண்டும். வீடுகள் கட்டுவதிலே, கூட்டுறவு முறையிலே வீடுகள் கட்டிவருகிறோம். மாவட்ட ரீதியாக இது தவிர ஹரிஜனங்களுக்கும் வீடுகள் கட்டிக் கொடுக்கிறோம். ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பதிலே ஒவ்வொரு ஆண்டும் மார்ச் 31-ம் தேதிக்குள் அதற்காக ஒதுக்கப்பட்ட ரூபாயை செலவழித்தாகவேண்டும் என்பதால், அதற்குள் வீடுகளை எப்படியாவது கட்டி முடித்துவிட வேண்டும் என்று நெருக்கடியான நிலைமை இருக்கிறது. அதனால் அதிகாரிகளும், அதனால் பயன் அடையக்கூடியவர்களும் அந்த வருட முடிவிற்குள் எப்படியோ ஒரு விதத்தில் வீடுகளை கட்டி முடித்துவிட முடிகிறது. ஆகையால் தாலுகா வாரியாக ஒன்று, இரண்டு இடங்களில் ஹரிஜனங்களுக்கு வீடு கட்டுவதில், அதை எப்படியாவது கட்டி முடித்துவிடக்கூடிய நிலைமை இருக்கிறது. இதைப்போன்று மற்றவர்களுக்கும் சந்தர்ப்பம் இல்லையே என்ற ஏக்கம் இந்த மசோதாவின் மூலம் நிவர்த்திக்கப்படுகிறது என்பதைக் கூற விரும்புகிறேன். சென்னையிலே இருக்கிற இந்த நகர அபிவிருத்தி டிரஸ்டு இங்கே நல்ல வேலை செய்திருக்கிறது. வீடு கட்டவேண்டும் என்று மனதிலேகூட சிந்திக்க முடியாத நிலையில் இருந்தவர்கள் எத்தனையோ பேர்களுக்கு வீடுகள் கட்டிக் கொள்வதற்கு இம்மாதிரி உதவி கிடைக்கக்கூடிய சந்தர்ப்பம் சென்னை நகரில் கிடைத்திருக்கிறது. நகர அபிவிருத்தி டிரஸ்டு போர்டு ஏற்பட்ட பிறகு, அதிகாரத்தில் இருப்பவர்களாக இருந்தாலும் சரி, அதிகாரத்தில் இல்லாதவர்களாக இருந்தாலும் சரி, அவரவர்கள் வேலையைச் செய்வதற்கு காலையில் போய் மாலையில் திரும்பிவரும்பொழுது அவர்களுக்கு நேரமே இல்லை. வீடு கட்டுவதற்கு செங்கல், சுண்ணாம்பு, சிமெண்டு போன்ற பொருள்களை பார்க்கக்கூட நேரம் இல்லை. அவர்களுக்கு இம்மாதிரி வீடுகள் கட்டுவதற்கு உதவி கிடைத்திருப்பது ஒரு பெரிய வரப்பிரசாதம். இதே நிலை மாவட்டங்களில் ஜில்லா ரீதியாக ஏற்படும் ஒரு அம்சத்தை நாம் வரவேற்கிறோம். முக்கியமாக வீடு அற்றவர்களுக்கு வீடு கட்டிக்கொடுக்கவேண்டுமென்பதை நான் 10 a.m.
வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். நெல்லையிலே கூட்டுறவு மூலமாக சில சொஸைட்டிகள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். கூட்டுறவு இல்லாமலும் சில சங்கங்கள் ஏற்படுத்தி வருகிறார்கள். நெசவாளிகளுக்கென்று சங்கங்களை ஏற்படுத்தி நிலங்களை ஆர்ஜிதம் செய்யக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இவ்வளவு செய்தபோதிலும்கூட, அங்கே இருக்கும் தலைவர், காரியதரிசி போன்றவர்கள் அவரவர்களுக்கு வேண்டியவர்களுக்கு கொடுக்கக்கூடிய மனப்பான்மையை நிறுத்தவேண்டும். ஆகவேதான் வீடு அற்றவர்களுக்கு விடு கட்டிக்கொடுக்கவேண்டுமென்பதை நான் வற்புறுத்துகிறேன். இப்பொழுது ஒருவருக்கு விடு இல்லாமல் இருக்கலாம். இன்னும் ஒரு ஆண்டு காலம் கழித்தால் தாயார்

[Srimathi Rajathi Kunchithapatham] [23rd February 1961

மூலமாகவோ, தகப்பனார் மூலமாகவோ அல்லது வேறு விதத்திலோ வீடு கிடைப்பதற்கு அவருக்கு ஒரு வாய்ப்பு இருக்கலாம். சட்டத்தில் இருக்கிறபடி, தற்சமயம் வீடு இல்லாதவர்களுக்குக் கொடுக்கலாமென்று இருப்பதால், ஒருவரே மேலும் மேலும் பலனடையக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. ஒரு வீடு இருப்பவர்களுக்கே இரண்டு வீடு, மூன்று வீடு என்று சொத்துக்குமேல் சொத்து சேகரிக்க வாய்ப்பு அளிக்காமல், வீடு இல்லாதவர்களுக்கே கொடுக்கவேண்டுமென்று அடிப்படையிலே, இதை அதிகாரிகளாவது பார்த்துச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இரண்டாவதாக இதிலே ரொம்பவும் தாமதம் ஏற்படுகிறது என்று பல அங்கத்தினர்கள் சொன்னார்கள். நெல்லையிலே கூட்டுறவு மூலமாக நகர சுத்தித் தொழிலாளர்களுக்கு வீடு கட்டும் திட்டத்தை நிறுவுவதற்கு 1956-ம் வருஷத்திலிருந்தே ஏற்பாடு செய்து வருகிறேன். 1960-ம் வருஷம் போய்விட்டது. 1961-ம் வருஷமும் வந்துவிட்டது. இன்னும் அதை ஆரம்பிக்க முடியாத நிலையில்தான் இருக்கிறோம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். லோன் அப்ளிகேஷன் கொடுத்தால் அது டெபுடி. ரெஜிஸ்தாரிடமிருந்து சென்னைக்கு வருவதற்கு மூன்று மாத காலம் ஆகிறது என்ற பயங்கரமான செய்தியைத்தான் நாம் கேட்கிறோம். அதிலே இவ்வளவு தாமதம் இருக்கக்கூடாது. சென்னையிலே இருக்கிற மேலதிகாரிகள் ஒத்துழைப்புக் கொடுக்கத் தயாராயிருந்தாலும், மாவட்டத்திலே இருக்கிற அதிகாரிகளும் ஒத்துழைப்பைக் கொடுத்தால்தான் வீண் காலதாமதம் ஏற்படாது. தாமதத்தை தடுக்கவேண்டுமென்று வலியுறுத்துகிறேன். இந்த போர்டிலே முக்கியமான அதிகாரிகள் எல்லாம் இருக்கிறார்கள். லாண்ட் ரெவின்யூ சம்பந்தப்பட்டவரை, நிலம் ஆர்ஜிதம் செய்வதில் ஏற்படக்கூடிய தாமதத்தைத் தவிர்ப்பதற்கு அதிகாரிகளும், கூட்டுறவு ரெஜிஸ்டிரார், ஹரிஜன நல டைரக்டர் போன்ற அதிகாரிகளும் இருக்கிறார்கள். இதுபோன்ற பல அதிகாரிகளை ஒருமைப்பாடு செய்து, இந்த போர்டை அமைத்திருப்பது மிகவும் வரவேற்கத்தக்க அம்சம். நில ஆர்ஜிதம் செய்வதில் ஏற்படும் தாமதத்தைப்பற்றி கனம் அங்கத்தினர்கள் ஸ்ரீனிவாசய்யரும், லாசரும் சொன்னார்கள். ஆர்ஜிதம் செய்வதிலே அதிக தாமதம் ஏற்படுவதைத்தான் நாம் பார்க்கிறோம். சம்பந்தப்பட்ட பேப்பருக்குப் பின்னால் போய் வேலை செய்தாலும்கூட சென்னைக்கு வருவதற்கு ஒரு ஐந்தாண்டுத் திட்டம் முடிந்து இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் வருகிற நிலைமை ஏற்படுகிறது. இந்த தாமதத்தை எவ்வளவு தவிர்க்க முடியுமோ அதற்கான நடவடிக்கைகளை சர்க்கார் எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். "வீட்டைக் கட்டிப் பார், கல்யாணம் பண்ணிப்பார்" என்று சொல்லுவதிலிருந்து, அது எவ்வளவு கஷ்டமான விஷயம் என்று தெரிகிறது. இந்த நிலைமையை சர்க்கார் ஏற்றுக்கொள்வது என்றால், நாட்டிலுள்ள அத்தனை பேருக்கும், அதாவது வீடு இல்லாமல் இருப்பவர்களுக்கு வீடு கட்டிக்கொடுக்கவேண்டுமென்கிற அமைச்சருடைய நல்லெண்ணம்

23rd February 1961] [Srimathi Rajathi Kunchithapatham]

புலனுகிறது. உண்ண உணவும், இருக்க இடமும் கொடுப்பது அத்தியாவசியத் தேவை என்ற அடிப்படையிலே இந்த போர்டு அமைக்கப்பட்டிருக்கிறது. நான்கு வருஷத்திற்கு முன்பு ஆரம்பிக்கப்பட்ட ஒரு திட்டமாயிருந்தால், இடத்திற்கு அவர்கள் வேல்யுவேஷன் போடும்பொழுது, ஆயிரம் ரூபாயாக இருந்தது, நாலாயிரம், ஐயாயிரம் என்று போகக்கூடிய நிலைமைக்கு வந்து விடுகிறது. இதைத் தவிர்ப்பதற்கு இந்த போர்டு வேலை செய்ய வேண்டும். ஒரு மாதத்திற்கு ஒரு முறை இந்த போர்டு கூடவேண்டும் என்று சொல்லியிருப்பது மிகவும் நல்லது. இரண்டு மாதத்திற்கு ஒரு முறை என்று இருப்பதை மாற்றி "ஒரு மாதம்" என்று போட்டால், இரண்டு மாதத்திற்கு ஒரு முறையாவது இந்த போர்டு கூடுமென்ற நிலைமை ஏற்படுமென்று நமக்குத் தெரியும். மாவட்டத்திலிருக்கிறவர்களுக்கும் பயன் தரத்தக்க முறையில் இந்த மசோதா அமைந்திருக்கிறது குறிப்பிடத்தக்கது. குறிப்பாக ரூபாய் 10 அல்லது 15 என்று வாடகை கொடுக்கும் குடும்பஸ்தர்களுக்கு இந்தத் திட்டம் பயன் படவேண்டும். பெரிய அளவிலே 5 லட்சம், 10 லட்சம் என்று கட்டக்கூடிய அளவிலே அதிகமாகப் பயன் ஏற்படாது. ஜில்லா வாரியாகப் பார்த்தால், இந்த "ஃப்ளாட்ஸ்" (flats) கட்டும் திட்டத்திற்கு மக்களிடம் அதிக ஆதரவு இருக்காது. சிறு சிறு வீடுகளாக 10 அல்லது 15 ரூபாய் வாடகை கொடுக்கக்கூடிய மக்களுக்கு ஏற்றாற்போல் கட்டிக்கொடுக்கவேண்டும். சிலர் 100 அல்லது 200 ரூபாய் வாடகை கொடுப்பதற்குத் தயாராயிருக் கிறார்கள். ஆனால் சிறிய வேலையிலிருப்பவர்கள், அதாவது டிரைவர்கள், கிளார்க்குகள் இவர்களுடைய நிலைமை மிகவும் மோசமாக இருக்கிறது. ஒரு குடிசை கூட கட்டிக்கொள்ள முடியாத நிலைமையில்தான் இவர்களுடைய நிலைமை ஜில்லாவிலும் இருக்கிறது. சென்னை, திருச்சி, மதுரை போன்ற பெரிய நகரங்களில்தான் வீட்டுக் கஷ்டம் இருக்கிறது என்று சொல்ல முடியாது. திருநெல்வேலி போன்ற மாவட்டங்களிலும் வீட்டுக் கஷ்டம் இருக்கிறது. ஆகவே திருநெல்வேலியிலும், மற்ற ஜில்லாக் களிலும் உள்ள நிலைமையை ஆராய்ந்து பார்த்து சிறு சிறு வருவாய் உள்ளவர்களுக்கு, ரூ. 4,000 அல்லது ரூ. 5,000 என்று முதல் போடக்கூடிய அளவிலே வீடுகள் கட்டிக்கொடுக்கவேண்டும். இது ஒரு நல்ல மசோதா. ஆகவே இதை முழு மனதுடன் ஆதரித்து என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

**MR. SPEAKER :** மூன்றாவது ரீடிங்கிலே என்ன சொல்லலாம், என்ன சொல்லக்கூடாது என்று சில அங்கத்தினர்களுக்குத் தெரியவில்லை போலிருக்கிறது. இப்பொழுது மூன்று அங்கத்தினர்கள் பேசினார்கள். ஒரு அங்கத்தினரைத் தவிர பாக்கிப்பேர் பேசினது "அவுட் ஆப் ஆர்டர்" என்றுதான் நினைக்கிறேன். முதல் ரீடிங்கிலே சொன்ன விஷயங்களை எல்லாம் மூன்றாவது ரீடிங்கில் திருப்பிச் சொல்வது தவறு என்பதை ரூலிங்கில் இருந்து எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

"The discussion on a motion that the Bill or the Bill as amended, as the case may be, be passed shall be confined to the submission of arguments either in support of the Bill or for the

rejection of the Bill. In making his speech a member shall not refer to the details of the Bill further than is necessary for the purpose of his arguments which shall be of a general character."

"The Chair has repeatedly drawn attention to the restricted scope of discussion at the third reading stage."

The Speaker of the Lok Sabha has ruled—

"It is of course competent to the House to reject a Bill even at the third reading and therefore to comment on the Bill as a whole. But it is entirely different from going into details and repeating a discussion which has already taken place."

The Speaker of Lok Sabha has also remarked as follows :—

"I am afraid it will be introducing a rather inconvenient precedent in this House if I were to allow a speech of that type at the third reading stage. The hon. Member may make his suggestions to the Hon. Minister and I am sure the Hon. Minister will give his due attention to whatever suggestions are made."

The Deputy Speaker of Lok Sabha has observed as follows :—

"We ought not to go into the clauses as they have been discussed in detail at an earlier stage".

The Deputy Speaker of Lok Sabha has again stated as follows :—

"It is not clause by clause discussion."

Finally the Speaker of the Lok Sabha has observed thus :

"In the third reading, no speeches are allowed ordinarily. Of course, except in extraordinary cases, and the case that members do not come in time cannot be treated as an extraordinary case. The position is that at the third reading the discussion is restricted only to such amendments or changes that have been made during the clause by clause reading stage."

ஆகவே முதல் ரீடிங்கிலே சொன்ன விஷயங்களை இப்பொழுதும் சொல்லுவது பொருத்தமாக இருக்காது. இங்கே செய்யப்பட்ட மாறுதல்களைப் பற்றிச் சொல்லுவதுதான் பொருத்தமாக இருக்கும். இதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, யாராவது அங்கத்தினர்கள் பேச முன் வந்தால் அவர்களை அனுமதிக்க எனக்கு ஆட்சேபணையில்லை.

(No hon. Member came forward to speak.)

MR. SPEAKER : I am afraid my ruling has restricted speech by hon. Members.

23rd February 1961]

SRI M. KALYANASUNDARAM : Are there no hon. Members to speak?

MR. SPEAKER : I do not know. I am not going to canvass for speakers. If there are no other hon. Members to speak, the hon. Member Sri M. Kalyanasundaram may now speak.

SRI M. KALYANASUNDARAM: கனம் சபாநயகர் அவர்களே, இந்த மசோதா சட்டமாக ஆகவிருக்கிறது. எதிர்க்கட்சியினர் கொடுத்த திருத்தங்கள் எதுவும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. முக்கியமாக, உத்தியோகப் பற்றற்றவர்களின் எண்ணிக்கை அதிகமாக்கப்படவேண்டுமென்பது குறிப்பிடத்தக்கது. இந்த போர்டில் ஏற்கனவே இருந்த அளவுக்குக்கூட உத்தியோகப் பற்றற்றவர்கள் இடம் பெற முடியாமல் இருப்பது வருந்தத்தக்கது. இருப்பினும் மசோதாவின் கொள்கையை வரவேற்கிறேன். இந்த மசோதாவில் கண்டு இருக்கிறபடி ஒரு ஹௌஸிங் போர்டு இருக்கவேண்டுமென்பது அவசியம். வீடு கட்டும் திட்டங்களை எல்லாம் ஒரு முகப்படுத்தி இன்னும் அதிகமாக வீடுகள் கட்டுவதற்கு இந்த மாதிரி ஒரு போர்டை அமைத்திருப்பது உதவிகரமாக இருக்குமென்று நான் நினைக்கிறேன். இந்த போர்டை நியமித்துவிட்டால் மட்டும் போதுமான அளவுக்கு வீடுகள் வந்துவிடுமென்று சொல்லிவிட முடியாது. வீடு கட்ட வேண்டிய நிலம், அதற்கு வேண்டிய பொருள்கள், இவைகள் எல்லாம் தனிப்பட்டவர்கள் கையிலிருக்கிறபொழுது, அதிகமாகப் பணம் கொடுத்தால்தான் மனை கிடைக்கும் என்று இருக்கிற நிலையிலே, வீடுகள் கட்டுவதற்குப் போதுமான மனைகள் கிடைப்பது அவ்வளவு சுலபமல்ல. இதில் ஓரளவுக்குக் கட்டாயம் இருக்கவேண்டியது அவசியம். அந்த அளவுக்கு, அரசாங்கம் ஏற்றுக்கொள்ளக்கூடிய அளவுக்கு, நிலத்தை ஆர்ஜிதம் செய்யக்கூடிய சட்டம் திருத்தப்படுமென்று சொன்னதை வரவேற்கிறேன். இன்றைக்கு அந்த மசோதா இங்கே பிரேரேபிக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. அதைக் கூடிய சீக்கிரம் நிறைவேற்றி அமுலுக்குக் கொண்டு வரவேண்டும் என்றும், அதிலும் வெகு துரிதமாகக் கொண்டு வந்து திட்டத்தை நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது கொண்டு வரப்படுகின்ற அபிவிருத்தி திட்டங்கள் எல்லாம் சென்னையிலும் அதன் சுற்றுப்புறத்திலும்தான் கொண்டு வரப்படுகின்றன. சென்னை நகரத்திற்கு அதிகப்படியான அபிவிருத்தித் திட்டங்கள் தேவையாக இருக்கலாம். அத்துடன் இன்னும் முக்கியமான நகரங்களாக இருக்கக்கூடிய திருச்சி, சேலம், கோயம்புத்தூர், மதுரை போன்ற நகரங்களுக்கும் பல அபிவிருத்தி திட்டங்களைக் கொண்டுவந்து நிறைவேற்ற வேண்டியது அவசியமாக இருக்கிறது. மற்ற முக்கிய நகரங்களிலும் சேரிகள் அதிகப்படியாக இருக்கின்றன, சுகாதாரத்திற்கு இடையூறு விளைவிக்கக்கூடிய சேரிகள் அநேகம் அநேக நகரங்களில் இருக்கின்றன. அங்கெல்லாம் பல அபிவிருத்தி

திட்டங்களைக் கொண்டு வந்து நிறைவேற்ற வேண்டியது அவசியமாக இருக்கின்றன. ஆகவே அவைகளையும் இத்துடன் சேர்த்துக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஆரம்பத்தில் இந்த மசோதாவைக் கொண்டுவந்தபோது அரசாங்கத்திற்கு சில எண்ணம் இருந்ததோ என்னமோ தெரியவில்லை. இதைப்பற்றி பொறுக்குக் கமிட்டியில் பரிசிலனை செய்து பார்த்தபிறகுதான் இப்படிப்பட்ட ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள். அந்த திருத்தங்களும் விவாதிக்கப்பட்டு எற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. முக்கியமான நகரங்களிலும் இம்மாதிரி திட்டங்களைக் கொண்டுவருவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளவேண்டும். அதற்கு அரசாங்கம் மீண்டும் முயற்சி எடுத்துக்கொண்டு அந்த அளவுக்கு வேண்டிய நிலத்தை வாங்கி—நிலத்தை வாங்க முடியுமோ அல்லது முடியாதோ அதைப்பற்றி தெரியவில்லை—நிலத்தை வாங்கி, அந்த முறையில் திட்டத்தை தயாரித்து அதன்படி செய்வதுதான் சாத்தியமாக இருக்கும். தனிப்பட்ட கூட்டுறவு ஸ்தாபனங்கள் நிலத்தை வாங்க வேண்டுமென்றாலும்கூட அதிலும் கஷ்டம் இருக்கிறது. அதனால் அரசாங்கமே ஒட்டு மொத்தமாக நிலத்தை வாங்கி வீடுகள் கட்டக்கூடிய கூட்டுறவு சொசைட்டிகளுக்கும் மற்ற இண்டஸ்ட்ரியல் சொசைட்டிகளுக்கும் மற்ற ஹௌசிங் சொசைட்டிகளுக்கும் நிலத்தைக் கொடுக்கும்படியாகக் கேட்டுக் கொள்ளுகிறேன். ஆகவே இதற்கு அரசாங்கம் நேரடியாகவே திட்டங்களை அமைத்து நகரங்களுக்கு ஆவன செய்ய வேண்டும் என்று வலியுறுத்த விரும்புகிறேன்.

அதோடுகூட, கமிட்டிகளை நியமிக்கும்போது தாராளமாக உத்யோக பற்றற்றவர்களையும், தொழிற்சங்க அங்கத்தினர்களை முனிசிபல் நிர்வாகத்தில் அனுபவம் உள்ளவர்களையும் போட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்களுக்கு எல்லாம் இந்தக் கமிட்டியில் இடம் அளித்து அவர்களையும் நியமிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய ரெகுலேஷன்களை இந்த போர்டுக்கு அரசாங்கம் அமைக்க வேண்டும். இந்த போர்டுக்கு இப்பொழுது எவ்வளவோ பெரிய அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை அவர்கள் உபயோகிக்கும்போது சரியான முறையில் உபயோகிக்கும் அளவில் அரசாங்கம் விதிகளை அமைக்க வேண்டும். அப்படி அரசாங்கம் போடக்கூடிய விதிகளை அனுசரிக்கக்கூடிய அளவில் அந்த போர்டு இயங்க வேண்டும். அதற்கு வேண்டிய விதிகளைப் பிரப்பிக்கவேண்டும் என்பதையும் நான் கூறிக்கொள்ள விரும்புகிறேன். அதோடுகூட இந்த ஹௌசிங் போர்டின் நடவடிக்கைகள் என்ன என்பதைப்பற்றி முடிவு செய்யக்கூடிய முறையில், அந்த போர்டு ஆறு மாதங்களுக்கு ஒரு தடவை அதன் நடவடிக்கைகளைப்பற்றி ஒரு அறிக்கையை சமர்ப்பிக்கவேண்டும் என்ற முறையில் விதிகளைச் செய்யவேண்டும். அவர்கள் அந்த ஆறு மாதங்களில் என்னென்ன வேலைகளைச் செய்திருக்கிறார்கள் எந்த

23rd February 1961] [Sri M. Kalyanasundaram]

முறையில் அது இயங்கி வருகிறது முதலியவைகளைப்பற்றி யெல்லாம் பரிசீலனை செய்யக்கூடிய அளவில் அவர்கள் ஆறு மாதங்களுக்கு ஒரு தடவை அறிக்கையை சமர்ப்பிக்க ஏற்பாடு செய்யவேண்டும். இந்த முறையில் என்னுடைய கருத்துக்களைச் சொல்லிக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளு கிறேன்.

**MR. SPEAKER :** கனம் அங்கத்தினர்கள் யாரும் பேச வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. எந்த முறையில் மூன்றாவது வாசிப்பில் பேசவேண்டும் என்பதைப்பற்றிதான் நான் குறிப்பிட்டேன். ஆகவே ஒருவரையும் பேசக்கூடாது என்று சொல்லவில்லை.

* **SRIMATHI A. S. PONNAMMAL :** கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது கொண்டுவந்திருக்கிற ஹௌசிங் போர்டு மசோதாவை நான் முழு மனதுடன் ஆதரித்து சில வார்த்தைகளைக் கூற விரும்புகிறேன். இந்த ஹௌசிங் போர்டுக்கு சில மெம்பர்களை எடுக்கப் போகிறார்கள். அப்படி எடுக்கும்போது நல்ல தகுதி வாய்ந்த ஹரிஜன மெம்பர் ஒருவரையும் அதில் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளு கிறேன். இன்றைக்கு ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டும் என்ற முறையில் நம் அரசாங்கம் பல லட்சக் கணக்கான ரூபாய்களை செலவு செய்து வருகிறார்கள். இருந்தாலும்கூட இப்பொழுது இருக்கக்கூடிய நிலைமையில் அதிகப்படியான மக்கள், அதிலும் ஹரிஜன மக்கள் வீடுகள் இல்லாமல் நகரப் பகுதிகளிலும், கிராமப் பகுதிகளிலும் இருக்கின்றார்கள். அப்பேர்ப்பட்ட நிலைமையில் இருக்கக்கூடியவர் களுக்கு வெகு விரைவில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்குள் அவர்கள் எல்லோருக்கும் வீடுகள் கட்டிக் கொடுத்து விடவேண்டுமென்ற நிலையில் வெகு துரிதமாக நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதன் பிறகு ஹரிஜனங்களுக்கு வீடுகள் இல்லை என்ற பேச்சிற்கு இடம் இல்லாமல் இருக்கக்கூடிய நிலைமையை உண்டாக்க வேண்டும். அந்த அளவில் இந்த ஹௌசிங் போர்டு இயங்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக இப்பொழுது கூட்டுறவு முறையில் வீடுகளைக் கட்டிக்கொண்டு வருகிறார்கள். அப்படிக் கட்டும்போது ஐந்தில் ஒரு பங்கை மக்கள் கொடுக்க வேண்டும் என்று இருக்கின்றது. அதனால் எல்லோராலும் கொடுக்க முடியவில்லை, பணக்காரர்கள் தான் கொடுக்கிறார்கள். அந்த அளவில் எல்லோருக்கும் வீடுகள் இல்லாமல் போய் விடுகிறது. அப்படிப் போவதற்கு இடம் இல்லாமல் கண்டிப்பாக சாதாரண நடுத்தர விவசாயி களுக்கும் வீடு கட்டிக்கொள்வதற்குண்டான வசதியைச் செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பணம் போட்டு வீடுகள் கட்டிக்கொள்ளக்கூடிய நிலையில் இல்லாத

நடுத்தர விவசாயிகளுக்கும் வீடுகள் கட்டிக்கொடுக்கக்கூடிய அளவில் இந்த போர்டு வேலை செய்யவேண்டும். அப்படிப் பட்ட நடுத்தர விவசாயிகளுக்கு இந்த போர்டு பணத்தை கடனாகக் கொடுத்து அதை வருஷம் 200 அல்லது 300 ரூபாயாகத் திருப்பிக் கொடுக்கக்கூடிய அளவில் இந்த போர்டு அவர்களுக்கு உதவி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய ஸ்கீமையும் தயாரிக்கவேண்டும். வீடுகள் கட்டுவதற்கு என்று நிலங்களை வாங்கும்போது வில்லங்க சர்ட்டிபிகேட்டுகள் வாங்குவதற்கு கால தாமதம் ஆகிறது என்று ஸ்ரீமதி ராஜாத்தி குஞ்சிதபாதம் பேசும்போது குறிப்பிட்டார். டிஸ்டிரிக்ட் ரிஜிஸ்தரார் ஆபீசிலிருந்து வருவதற்கு காலதாமதம் ஆகிறது என்றும் இந்த நிலையில் சர்ட்டிபிகேட் வாங்குவதற்கு மூன்று அல்லது நான்கு வருஷங்கள் ஆகிறது என்றும் குறிப்பிட்டார். அப்படி காலதாமதம் ஆகாமல் இருப்பதற்கு வேண்டிய நடவடிக்கையையும் எடுத்துக்கொள்ளவேண்டும். அதை மாற்றுவதற்கு வேண்டிய ரூல்ஸ் அண்ட் ரெகுலேஷன்களை மாற்றி அமைக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். வேண்டிய முறைகளில் நடவடிக்கை எடுத்துக்கொண்டு நடுத்தர விவசாயிகளுக்கும், ஹரிஜனங்களுக்கும், லோ இன்கம் க்ரூப்-களுக்கும், தொழிலாளர்களுக்கும் மற்றுமுள்ளவர்களுக்கும் வீடு கட்டும் திட்டத்தை இந்த ஹௌசிங் போர்டு வகுத்து வேண்டிய நடவடிக்கைகளை நல்ல முறையில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். மற்றும் கூலி விவசாயிகளுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்கவேண்டும். அப்படிச் செய்தால்தான் இந்த போர்டு நல்ல வசதி செய்ததாக ஆகும். கிராமங்களில் ஆயிரம், இரண்டாயிரம் ரூபாய்க்கு இப்பொழுது வீடுகள் கட்டமுடியாது. குறைந்த பட்சம் ஐயாயிரம் ரூபாயாவது வேண்டியதாக இருக்கிறது. அந்த முறையில் கிராமங்களிலுள்ளவர்களுக்கு ஐயாயிரம் ரூபாய் கடனாகவாவது கொடுத்து அவர்களை வீடுகள் கட்டிக் கொடுக்கச் சொல்லிவிட்டு அந்தக் கடனை சுமார் இருபது வருஷ தவணையில் திருப்பிக் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளுகிறேன். அந்த முறையில் வருஷத்திற்கு 200 அல்லது 300 ரூபாயை திருப்பிக் கொடுக்கும் அளவில் அவர்களுக்குக் கடன் கொடுத்து உதவ வேண்டும் என்று கூறிக்கொண்டு மறு முறை இந்த மசோதாவை ஆதரித்து இதை தாலுகாக்களுக்கு விஸ்தரித்திருப்பதை வரவேற்று இதை வெகு சீக்கிரத்தில் அமுலுக்குக் கொண்டுவரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை எல்லா அங்கத்தினர்களும் கட்சி பாகுபாடு இன்றி வரவேற்பதைக் கண்டு நான் அவர்களுக்கு நன்றி செலுத்துகிறேன். வீட்டுப் பிரச்னை கட்சிப் பிரச்னை அல்ல. அது எல்லோருக்கும் உள்ள பிரச்னைதான். எல்லோரும் வசதியாக வீடுகளைக் கட்டிக்கொண்டு வசிப்பதற்கு எந்த விதத்திலும்

23rd February 1961] [Sri R. Venkataraman]

கட்சிகளுக்குள் வேற்றுமை இருக்க முடியாது. அந்த முறையில் எல்லா அங்கத்தினர்களும் இதற்கு ஆதரவு கொடுத்த தற்கு மீண்டும் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

வீடுகள் கட்டும் திட்டங்கள் பல இருக்கின்றன. ஆனால் இப் பொழுது கொண்டுவந்திருக்கிற மசோதா இருக்கக்கூடிய எல்லா திட்டங்களையும் இணைக்கக்கூடிய ஒரு மசோதா. நகரத்திற்கு பல திட்டங்கள் இருக்கின்றன. அவைகளை எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து அவைகளை இந்தச் சட்டத்திற்கு உட்படுத்த வேண்டும் என்று சொன்னால் அது சட்டத்திற்கு புறம்பானது என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன். அவைகளை இதன் மூலமாகக் கட்டுப்படுத்த முடியாது. கூட்டுறவு முறை மூலம் வீடுகள் கட்டு வதாக இருந்து அவற்றில் ஏதாவது குறைகள் இருந்தால் அவற்றை இந்த போர்டு நிவர்த்தி செய்யும். அந்தக் குறைகளை கூட்டுறவு இலாகா மானிய கோரிக்கைமீது விவாதம் நடக்கும் போது எடுத்துச் சொன்னால் அதைப்பற்றி கவனிக்கப்படும். அதைப் போலவே ஹரிஜன இலாகா மூலமாக வீடுகள் கட்டிக் கொடுக்கிறார்கள். அவற்றில் ஏதாவது குறைபாடுகள் இருந்தால் ஹரிஜன இலாகா மானிய கோரிக்கைமீது விவாதம் நடக்கும் போது குறிப்பிட்டால் அதைப்பற்றி கவனிக்கப்படும். அப்படி மற்ற துறைகள் மூலமாக ஏதாவது குறைகள் இருந்தால் அவற்றை அந்தந்த இலாகா மானிய கோரிக்கையின்மீது விவாதம் நடக்கும் போது எடுத்துச் சொன்னால் அதை நிவர்த்திக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும்.

வீடுகள் கட்டுவதற்கு என்று இப்பொழுது பல திட்டங்கள் இருக்கின்றன. அவற்றில் ஏதாவது குறைகள் இருந்தால் அதை நிவர்த்திக்க இந்த போர்டு ஏற்படுத்தப்படுகிறது. அப்படிப்பட்ட திட்டங்களையெல்லாம் இணைக்கக்கூடிய போர்டுதான் இது. இந்த போர்டு என்ன முடிவு செய்கிறதோ அதன்படி எல்லா திட்டங் களும் எடுத்துக்கொள்ளப்பட வேண்டும். அவைகளுக்கு ஆதரவாகத்தான் இது இருக்கும். மற்ற திட்டங்கள் வீடுகள் கட்டுவதற்கு இந்த போர்டு உதவியாக இருக்கும். ஆரம்பத்தில் சென்னை நகரத்தில் நான்கு இடங்களில் நிலத்தை வாங்கி அங்கு வீடுகளைக் கட்டி விஸ்தரிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அவைகளாவது வியாசர்பாடி ஸ்கீம், கோடம்பாக்கம் ஸ்கீம், ஊரூர் கிராம ஸ்கீம், சென்னை மேற்கு பகுதி ஸ்கீம் அதாவது வெஸ்ட் மெட்ராஸ் ஸ்கீம், ஆக நான்கு ஸ்கீம்களை தயாரித்திருக் கிறோம். இப்படிப்பட்ட இடங்களில் இந்த திட்டத்தை அமுல் நடத்த சர்க்காருடைய நோக்கம். இங்கு 400—500 ஏக்கர் நிலம் வாங்கப்பட்டிருக்கிறது. அங்கு எல்லா பகுதிகளிலும் வீடுகளைக் கட்டிக் கொடுத்து வேண்டிய வசதிகளையும் செய்து கொடுக்க வேண்டுமென்பது தான் நோக்கம். இப்பொழுது இருக்கக்கூடிய ஹரிஜன ஹௌசிங் ஸ்கீம், இண்டஸ்ட்ரியல் ஹௌசிங் ஸ்கீம், லோ இன்கம் க்ரூப் எல்லாவற்றையும் சேர்த்து ஒரு காம்போஸிட்

ஸ்கீமாகப் போட்டுச் செய்யவேண்டும் என்பதுதான் முக்கியமான நோக்கம். தனித்தனியாக அமுல் நடத்துவதாக இருந்தால் அது முடியவில்லை. பல சங்கடங்கள் ஏற்படுகின்றன. செலவும் அதிகமாக ஆகிறது. ஆகவேதான் இப்படிப்பட்ட திட்டம் வகுக்கப்படுகிறது.

குறிப்பிட்ட ஒரு இடத்தில் இப்பொழுது 400 எக்கர் நிலம் வாங்கினால், அதற்குத் தண்ணீர் வசதி, சாக்கடை வசதி முதலிய வைகளெல்லாம் ஏற்படுத்துவதற்குத் திட்டம் போடவேண்டும். அத்துடன் ஒவ்வொரு இலாகாவுக்கும் தேவயான இடம் ஒதுக்க வேண்டும். அதாவது, இன்டஸ்ட்ரியல் ஹௌஸிங்குக்கு இத்தனை ஏக்கர் ஹரிஜனங்களுக்கான ஹௌஸிங் ஸ்கீமுக்கு இத்தனை எக்கர், ஸ்லம் க்ளியர்ன்சுக்கு இத்தனை ஏக்கர், லோ இன்கம் க்ரூப் ஹௌஸிங் ஸ்கீமுக்கு இத்தனை எக்கர் என்று ஒதுக்கினால் திட்டம் நன்றாக நடக்கும். அத்துடன் கொஞ்சம் மலிவாகக் கூட வீடு கட்டும் நிலைமை ஏற்படும். இதை ஒழுங்குபடுத்துவதற்குத்தான் சட்டம் கொண்டுவருகிறோம்.

பல காரியங்கள் செய்யவேண்டும் என்பதையெல்லாம் கனம் அங்கத்தினர்கள் சொன்னார்கள். நமக்குத் தேவைக்கான எல்லாக் காரியங்களையும் எல்லா இடங்களிலும் செய்துவிடவும் இல்லை. செய்து விட்டதாகச் சொல்லவும் இல்லை. நமக்கு வேண்டுமென்ற தேவை அளவுக்குத் துணி உற்பத்தி செய்யவில்லை, உணவு உற்பத்தி செய்யவில்லை, தேவை அளவுக்குப் புளி, மிளகாய் உற்பத்தி செய்ய வில்லை. தேவை அளவுக்கு வீடுகளும் கட்டப்படவில்லை. அதை யாரும் செய்துவிட்டதாகச் சொல்ல முடியாது. தேவை அளவுக்கு வீடுகள் கட்டவேண்டும் என்பதற்காகத்தான் முயற்சி எடுத்துக் கொள்ளப்படுகிறது. இந்த முயற்சிக்கு எல்லோரும் பேராதரவு கொடுக்கவேண்டுமென்றும் இந்த மசோதாவை அங்கீகரிக்கும் படியும் கேட்டுக்கொள்கின்றேன்.

MR. SPEAKER : The question is—

'That the Madras State Housing Board Bill, 1961 (L.A. Bill No. 31 of 1960) as amended be passed.'

The motion was put and carried and the Bill as amended was passed.

## IV.—SITTINGS OF THE HOUSE.

SRI M. KALYANASUNDARAM : சபை கூடும் தினங்களைப் பற்றி அனுப்பியிருக்கும் சுற்றறிக்கையில் பிப்ரவரி 27-ம் தேதி யன்று சபை கூடும் என்று கண்டிருக்கிறது. 25-ந் தேதியன்று நிதி அமைச்சர் அவர்கள் பட்ஜெட்டைச் சமர்ப்பிப்பார். 26-ந் தேதி ஞாயிற்றுகிழமையாதலால் அன்று விடுமுறை ஆகிவிடுகிறது. 27-ந் தேதி ஒரு நாள் சபை கூடின பிறகு பிப்ரவரி 28-ம் தேதியும் மார்ச் 1-ந் தேதியும் ஸென்ஸஸ் எடுப்பு காரணமாக விடுமுறை நாட்களாகின்றன. 27-ந் தேதியன்றும் சபையை ஒத்திப்போடுவது

23rd February 1961] [Sri M. Kalyanasundaram]

நலமாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். காரணம், மத்திய சர்க்கார் பட்ஜெட் 28-ந் தேதி சமர்ப்பிக்கப்படும். அதையும் படித்து விட்டு, நம் ராஜ்ய சர்க்காருடைய பட்ஜெட்டையும் படித்துவிட்டு, விவாதத்தில் கலந்துகொள்வதற்கு வசதியாக இருக்கும்பொருட்டு, பொது விவாதத்தை மார்ச் 2-ந் தேதியிலிருந்து தொடர்ந்து ஐந்து நாட்கள் வைத்துக்கொள்ளலாம். அதற்குப் பிறகு தொடர்ந்து மான்யங்களை தனித் தனியாக எடுத்துக்கொள்ளலாம். இந்த யோசனையை ஆலோசிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : அரசாங்க சார்பில் என்ன அபிப்பிராயம் என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, the Government have no objection to the proposal.

MR. SPEAKER : The suggestion put forward by the hon. Member, Sri M. Kalyanasundaram is this. On the 25th February the Hon. Finance Minister will be presenting the Budget. 26th February is a holiday being Sunday. 28th February and 1st March are Census holidays. Originally we decided to sit on the 27th February 1961 also. The hon. Member Sri M. Kalyanasundaram suggests that the Assembly need not meet on that date. If that is the desire of the House, I have no objection and the hon. Member may move a motion.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move—

'That the House need not sit on Monday, the 27th February 1961.'

The motion was duly seconded.

The motion was put and carried.

MR. SPEAKER : The Assembly will adjourn on the 25th February 1961 and will meet again at 10 a.m. on Thursday, the 2nd March 1961.

III.—GOVERNMENT BILLS—*cont.*

(4) THE MADRAS ESTATES ABOLITION AND CONVERSION INTO RYOTWARI AMENDMENT BILL, 1961 (L.A. BILL NO. 5 OF 1961).

* THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

'That the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Amendment Bill, 1961 (L.A. Bill No. 5 of 1961), be taken into consideration.'

Under section 39 (1) of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act, 1948, the Director of Settlements determines the basic annual sum and the total compensation payable in respect of an estate taken over under the Act. He issues a notice under section 39 (2) and furnishes each landholder who has applied for it with a copy of the data on the basis of which the basic annual sum is proposed to be determined, hears the representations

of the landholders or other persons interested and then determines the basic annual sum and the amount of compensation payable. A copy of his order is communicated to every landholder concerned and to every applicant. Section 39 (5) of the Act provides for appeal to the Board on an order issued under section 39 (1) by the Director of Settlements; Section 39 (6), for revision by the Board of Revenue either *suo motu* or on an application by any persons and Section 39 (6-A) for review by the Board of Revenue of any order passed by it under sub-section (5) of sub-section (6), if it is of the opinion that its order is vitiated by an error in the decision on a point of law or by a mistake. The following practical difficulties are encountered in the determination of compensation for estates taken over.

On the introduction of settlement in each estate it is necessary to deposit the final compensation within nine months from the date of handing over of fair accounts. A final compensation has also to be deposited as far as possible before the end of the fasli year to save unnecessary expenditure which will be entailed otherwise on account of interim payment for one additional fasli. With this end in view, the final compensation proposals are at present worked out first on a provisional basis only for three reasons.

Firstly, it has been found generally that finality could not be reached in the Statutory proceedings instituted under the several provisions of the Abolition Act such as sections 11, 12 to 15, 17, 18 (4), 19 19-A and 63 by the time settlement work is completed and fair accounts are written up for any area. They are pending either in revison with the Director of Settlements or with the Board. Appeals and revisions are also pending with the Estates Abolition Tribunals, or in Civil Courts or in the High Court in writs taken up by interested parties. In such cases, fair accounts will necessarily have to be written up treating these cases, as 'held over' and unless a stay by a competent Court of law is in force, the available orders of the highest authority under the Act are being given effect to in the fair accounts with a note that the cases have been taken on appeal, revision or writ petition. When the statutory decisions in appeal, revision or writ petition become available after introduction of settlement, the fair accounts are corrected and final compensation proposals also are revised giving effect to the changes resulting from such decisions.

Secondly, when simultaneous pressure for Fair Area Lists, for duplicate Field Measurement books or for village maps is received from several branch Settlement Offices, the survey parties cannot cope with it. Inevitably for want of Fair Area Lists, Tentative Area Lists are being adopted in writing up the fair accounts and in proposing final compensation. After Fair Area Lists are received from the survey party, the final compensation proposal already submitted is revised.

23rd February 1961] [Sri M. A. Manickavelu]

Thirdly, in actual practice, it is found that the settled accounts from which miscellaneous revenue particulars have to be gathered for working out the compensation, are some times not forthcoming from the Village Officers or the Estate Managers. Subsequently, when due to further search, these accounts are got at, better data become available for determination of the basic annual sum and this again necessitates revision of the final compensation proposal.

The present provisions are so rigid that even clerical or arithmatical errors unwittingly committed by the Director of Settlements in determining the basic annual sum and the total compensation cannot be rectified by the Director of Settlements himself. In all such cases, revised proposals will have to be submitted to the Board under section 39 (6) and the Board will have to invite objections of the landholders and then pass order. With the progressive increase in the number of estates settled in each fasli, due to the above unavoidable practical difficulties, cases will come up for revision or review by the Board of Revenue (Settlement of Estates) in increasingly large number and the volume of work in the Board's office will be unmanageable. The review of final compensation arising out of the circumstances mentioned above can legitimately and easily be undertaken by the Director of Settlement himself. It is therefore proposed to amend section 39 of the Abolition Act so as to empower the Director of Settlements to review his own orders determining the basic annual sum and total compensation under section 39 (1) of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act, 1948, if they are vitiated by any clerical or arithmetical mistake or error apparent on the face of the record, or, if, subsequent to the passing of the order, data for the better calculation of the basic annual sum have become available, or, if the order required to be modified in pursuance of the final order of any competent authority or court.

In all these cases only the effect of the orders is being carried out in accounts and the revision of final compensation automatically flows from it and there is no need for the Board to be moved in such cases. The amendment proposed will simplify the procedure and at the same time reduce the workload of the Board. The review order of the Director of Settlements will be subject to appeal to and revision by the Board of Revenue in the same way as his order under section 39 (1).

Provision is made in the Bill that the Director of Settlements should give a reasonable opportunity to every landholder and every applicant concerned of being heard before he modifies his earlier order. It is also provided for in the Bill that the Director of Settlements should communicate to them also a copy of his modified order.

Clause 2 (*a*) of the Bill contains necessary provisions in this regard. The amendments in clause 2 (*b*) and 2 (*c*) are consequential to the amendments provided for in clause 2 (*a*).

In 1953, the Board of Revenue brought to the notice of the Government that the villages Aradaiental and Pooranathanendal were included under the heading "Ramanathapuram" instead of under "Sivaganga" in the Schedule to Madras Act XVII of 1951. Opportunity is being availed of to amend the Schedule to Madras Act XVII of 1951 by clause 3 of the Bill.

The Bill does not involve expenditure from the Consolidated Fund of the State and therefore no Financial Memorandum is necessary under Rule 89 of the Madras Assembly Rules. No Memorandum regarding delegated legislation is necessary under Rule 90 of the said Rules as the Bill does not involve delegation of the legislative powers.

I request the House Sir, that the Bill be taken into considera-
10-30 a.m. tion.

MR. SPEAKER : There has been some mistake. The Hon. Minister has now moved the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Amentment Bill, 1961, instead of the Madras Estates Land (Reduction of Rent) Amendment Bill as per the order in the agenda. The Minister may move a motion accordingly for change in the order of business.

**V.—GOVERNMENT MOTION *RE* CHANGE IN THE ORDER OF BUSINESS.**

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the item in the agenda relating to the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Amendment Bill, 1961 (L.A. Bill No. 5 of 1961) be taken up first."

The motion was put and carried.

III.—GOVERNMENT BILLS—*cont.*

(4) THE MADRAS ESTATES (ABOLITION AND CONVERSION INTO RYOTWARI) AMENDMENT BILL, 1961 (L.A. BILL NO. 5 OF 1961)—*cont.*

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

"That the concurrence of the Legislative Council be obtained for setting up a Joint Select Committee of both the Houses consisting of . . . Members ( . . . . Members of the Legislative Assembly and . . . Members of the Legislative Council) to consider the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Amendment Bill, 1961 (L.A. Bill No. 5 of 1961) and that the following Members of the Legislative Assembly be selected to serve on such a Joint Select Committee (List of names to be furnished later)."

SRI N. K. PALANISAMI : I second the amendment, Sir.

MR. SPEAKER : The motion and the amendment are before the House for discussion.

23rd February 1961]

**SRI S. LAZAR**: கனம் சபாநாயகர் அவர்களே, வெகு நாட்களாக எதிர்பார்த்துக்கொண்டிருந்த இந்த மசோதா இன்றைய தினமாவது வந்ததே என்று நாங்கள் எல்லோரும் முழு மனதுடன் வரவேற்கிறேம். இதில் ஒருவித கஷ்டம் இருக்கிற தென்பதைப் பற்றி சட்டசபையில் கூட கனம் அங்கத்தினர் ஸ்ரீனிவாச ஐயர் அடிக்கடி சொல்லிக்கொண்டு வந்தார்கள். நடைமுறையில் கேஸ்களை நடத்திக்கொண்டுவரும் வழக்கறிஞர் களுக்கு இவை நன்ருகத் தெரியும். இது மிகவும் தொல்லையாக இருக்கிறது என்ற நியாயம் பட்டபோதிலும் கூட அதிகாரி களுக்கு எந்தவிதமான காரியமும் செய்ய முடியாத நிலைமை இருந்து வந்தது. அப்பேர்ப்பட்ட சங்கடமான நிலைமையைப் போக்க இந்த மசோதா கொண்டு வந்திருப்பதை முழு மனதுடன் வரவேற்கிறேம். ஆனல் இந்தத் திருத்த மசோதா கொண்டுவந்து விட்ட காரணத்தினுல் ஏற்கனவே இந்தச் சட்டத்தில் இருக்கக் கூடிய குறைகள் எல்லாம் நிவர்த்தியாகிவிடுகின்றன என்று தயவு செய்து அமைச்சர் அவர்கள் எண்ணிவிடக்கூடாது. இன்னும் எத்தனையோ குறைகள் இருக்கின்றன. குறைகளைப் பற்றி அடிக் கடி பலர் எடுத்துச் சொல்லி வந்தார்கள். முக்கியக் குறை இதில் காலதாமதம்தான். இந்தச் சட்டம் 1948-லேயே கொண்டுவரப் பட்டிருக்கிறது. ஆனல் இருக்கக்கூடிய எஸ்டேட்டுகளை ஒழிப் பதற்கு நடைமுறையில் எவ்வளவு நாட்களாகின்றன என்பது கனம் அமைச்சர் அவர்களுக்கு நன்ருகத் தெரியும். அதோடுகூட அவைகளை எடுத்துவிடுவது பெரிய காரியம் இல்லை. எடுத்து விட்ட பிறகு ரயத்வாரியாக மாற்றுவதில் ஏற்படக்கூடிய காலதாமதம் கொஞ்சநஞ்சமல்ல. இன்னும் கூட ரயத்வாரி பட்டா அநேகம் பேருக்குக் கொடுக்கப்படவில்லை. அமைச்சர் அவர்கள்கூட பொதுக் குறிப்பில் இதற்கான கஷ்டங்கள் என்ன என்பதைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். சர்வே செய் வதில் இருக்கக்கூடிய காலதாமதம், சர்வே செய்த பிறகு பட்டா வழங்குவதில் ஏற்படக்கூடிய காலதாமதம் அதிகமாக இருக்கிறது. திருச்சி ஜில்லாவில் இதுமாதிரி நிலைமை இருக் கிறது. இந்தச் சட்டத்தின் மூலம் நாம் எவ்வளவோ நன்மைகளை பொதுமக்கள் பெறவேண்டுமென்று விரும்பினுலும், இப்படிக் கால தாமதமாவதால் இந்த நன்மைகளை மக்கள் அனுபவிக்க முடிய வில்லை. ஆகவே இந்த வேலைகளை இன்னும் துரிதமாக முடித்துக் கொடுப்பதற்கான வாய்ப்புகளையும், வசதிகளையும் அமைச்சர் அவர்கள் ஏற்படுத்தித் தரவேண்டும். உதாரணமாக எத்தனையோ கடன் வழங்கும் திட்டங்களை ஏற்படுத்தியிருக்கிறேம். ஆனல் பலர் பட்டா இல்லை என்ற காரணத்தினுல் அவ்வசதியைப் பெறமுடியாத நிலைமையில் இருக்கிருர்கள். அதுபோல் வெளியில் கடன் வாங்கவேண்டுமென்று சொன்னுலும், நிலத்தை விற்கவேண்டுமென்று சொன்னுலும் அவர்களுக்குப் பலவித கஷ்டங்கள் உண்டாகின்றன. இவைகளை எல்லாம் சரிப்படுத்து வதற்கு சட்டத்தையே மாற்றவேண்டுமென்பது இல்லை. அதிகாரிகளின் எண்ணிக்கையை அதிகப்படுத்தி அவர்களுக்கு

ஊக்கம் அளிக்கவேண்டும். ஏற்கனவே அந்த இலாகாவில் இருந்து சிப்பந்திகளை அதிகப்படுத்தவேண்டுமென்ற கோரிக்கை வந்திருந்தாலும், அமைச்சர் அவர்கள் அதில் எந்த விதமான காலதாமதமும் செய்யாது விரைவில் ஆவன செய்துத் தரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதுவும் இந்த இலாகாவின் சப்ஜக்ட் ஆனதினால் அவர்களுக்குக் கொஞ்சம் ஊதிய லாபத்தையாவது அளித்து உற்சாகமூட்டி இவ்வேலைகள் எல்லாம் துரிதமாக நடைபெற அமைச்சர் அவர்கள் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். ஆகவே இவ்விஷயங்களை எல்லாம் மனதில்கொண்டு தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்கிற கோரிக்கையோடு இந்த மசோதாவை வரவேற்று என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

SRI N. K. PALANISAMI : Sir on a point of order. The thing is that the provisions of the Act have been stayed and the matter is in the High Court and Supreme Court. When provisions have not been implemented, how can Government move amendment after amendment?

THE HON. SRI M. A. MANICKAVELU : Whatever is pending in the Courts is with regard to other matters; this is purely a technical matter whereby we are empowering the Director of Settlements in regard to particular matters.

* SRI R. SRINIVASA IYER : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவினால் இந்த 12 வருஷத்திற்கு மேற்பட்ட 26 ஆப் 1948 சட்டத்தின் மூலம் ஏற்பட்ட கஷ்டங்கள், பிரச்னைகள் ஓரளவு தீரலாம் என்பதை திரு. லாசர் போல சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இது நஷ்ட ஈடு சம்பந்தப்பட்டது. ஒருவர் சொத்தை எடுத்துக்கொண்டு நஷ்டஈடு கொடுப்பது, இதில் நடைமுறையில் எத்தனை கஷ்டங்கள் இருக்கின்றன என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஒரு எஸ்டேட்டினுடைய பேசிக் வருமானம் எவ்வளவு என்பதை அதை ஆர்ஜிதம் செய்கிறபோது—அந்தக் கணக்குப்பிள்ளை, அல்லது எஸ்டேட் மானேஜரிடம் விவரம் கோரப்படுகிறது. அவர்கள் அந்த எஸ்டேட்டைச் சேர்ந்தவர்களிடம் எதுவும் கேட்காது, தாங்களே ஏதோ இஷ்டம் போல அடிப்படை வருமானம் எவ்வளவு என்று குறித்து அனுப்பிவிடுகிறார்கள்.

"பேஸிக் ஆன்யுவல் சம்" இவ்வளவு என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது என்று மட்டும்தான் நோட்டீஸ் கொடுக்கிறார்கள். செக்ஷன் 54 (எ)-படி அட்வான்ஸ் காம்பன்சேஷன் பாதி காம்பன்சேஷன் தொகை என்று நிர்ணயிக்கப்பட்டு அநேகமாக பட்டுவாடா செய்யப்பட்டு விட்டது. பெரும்பாலோர் பணம் வாங்கியும் விட்டார்கள். அதைத் தவிர அவர்களுக்கு வேறு சொத்து இல்லை. 19,000 ரூபாய் கொடுக்கப்பட்டதில் 18,000 ரூபாய்

23rd February 1961] [Sri R. Srinivasa Iyer]

திருப்பிக் கொடுக்கவேண்டுமென்று இப்பொழுது ஆர்டர் போடு கிறார்கள். ஆனால் அதை எங்கிருந்து வசூல் செய்யப் போகிறார் களோ, அவர்கள் கையில் பணத்தை வைத்துக் கொண்டாயிருக் கிறார்கள்? உத்தரவு ரெஜிஸ்தர் தபாலில் அனுப்ப வேண்டுமென்று இருந்தாலும் ஆர்டர் போட்ட தேதியிலிருந்து 6 மாதத்திற் குள்ளாக நஷ்டயீட்டை க்ளெயிம் செய்யவேண்டுமென்று 42-வது செக்ஷனில் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் அதை ஆறு மாத காலம் வரை தள்ளிப் போடலாம் என்றும் இருக்கிறது. அநேகமாக 50 சத விகிதம் காலாவதியாகிவிட்டதென்று தள்ளுபடி செய்யப்பட்டுவிட்டது. ஆறு மாத பின் கெடு அவசிய மில்லை என்று நான் ஒரு மசோதா கொண்டுவந்தேன். அது பிரசுரமாகியிருக்கிறது. அதை அநேகர் வரவேற்று எனக்கு லெட்டர்களும் எழுதியிருக்கிறார்கள். ஆனால் சர்க்கார், நாங்கள் அதுபற்றி திருத்தங்கள் கொண்டு வரப்போகிறோம், நீங்கள் இந்த மசோதாவை கொண்டுவர வேண்டியதில்லை என்று எனக்கு எழுதி யிருக்கிறார்கள். அப்படி ஒரு திருத்த மசோதா கொண்டுவந்தால் அநேகவித இக்கட்டுகள் தீர்ந்து போய் விடும். அந்த சட்டம் வந்த 2 வருடத்திற்குள், இன்னின்ன வித சிக்கல்கள் இதில் இருக்கின்றன என்று நான் ஒரு புத்தகம் போட்டிருந்தேன். கொஞ்சம் கொஞ்சம் மாக திருத்தங்கள் கொண்டுவருவதில் அநேகவித இடைஞ்சல்கள் ஏற்படுகின்றன. நஷ்டயீடு தீர்மானிக்கும்போது சம்பந்தப்பட்ட வரை வைத்துக்கொண்டு தீர்க்காமல் ஒரு கணக்கு போட்டு அதை டெப்பாஸிட் செய்து விடுகிறார்கள். அதுபற்றி அப்பீல் செய்ய வேண்டுமானால், மனு கொடுத்து நகல் வாங்க வேண்டும். இரண்டு பக்கங்களுக்கு பேட்டா கொடுக்கிறார்கள். நிலம் எடுக்கும்போது, என்னென்ன நிலம், இனம் நிலமா, நஞ்சை எவ்வளவு, புஞ்சை எவ்வளவு என்றெல்லாம் கணக்கு போட்டு கொடுப்பதில்லை. நகலுக்கு மனு போட்டால் 300, 400 காபி ஸ்டாம்புகள் என்றாகிறது. லான்ட் ஹோல்டரை கூட வைத்துக் கொண்டு கணக்குப் போட்டால் அவர்கள் கணக்கை தெரிந்து கொள்ள முடியும். 11-வது செக்ஷன்படி, ரயத்வாரி பட்டா நிலங்களுக்கு மட்டும் விலக்களிப்பது, 15-வது செக்ஷன்படி தவறுதலாக பட்டா கொடுக்கப்பட்டிருந்தாலும்கூட அதை விலக்குவதா என்ற பிரச்னை எழுந்திருக்கிறது. டைரக்டர் ஆப் செட்டில்மென்ட்-க்கு ஒரு உத்தரவு அனுப்பியாவது "பேஸிக் ஆன்யுவல் சம்" கணக்கு போடும்போது நஷ்டயீடு பெறக்கூடிய லான்ட் ஹோல்டரை வைத்துக்கொண்டு கணக்குப் போட்டால் சௌகரியமாகயிருக்கும். சர்க்காருக்கும் வேலை சற்று குறையும். கணக்குப்பிள்ளையிடம் கேட்டால் எங்களுக்கு விவரம் கொடுக்க அதிகாரமில்லையென்கிறார். அவர்களுக்கு அதிகாரமில்லை, ஆகவே அவர்களைக் கேட்டும் பிரயோஜனமில்லை. ஆக, பல சிக்கல்கள் இருக்கின்றன, அவைகளையெல்லாம் ஒரேயடியாக தீர்க்க வேண்டும். நான் கொண்டு வந்திருக்கும் மசோதா குறித்து டெப்டி செக்ரட் டரியிடம் இருந்து ஒரு லெட்டர் வந்திருக்கிறது. சர்க்காரே அதுபற்றி திருத்தங்கள் கொண்டுவர இருக்கிறார்கள், என்று

[Sri R. Srinivasa Iyer] [23rd February 1961

எனக்கு லெட்டர் வந்திருக்கிறது. ஆகவே, அதுபற்றி திருத்தங்களை சர்க்காரே கொண்டுவரப் போகிறார்கள் என்று இருப்பதால், அதை உடனடியாக கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். ஒருவருக்கு நஷ்டயீடு கொடுக்கும்போது நஷ்டயீட்டுத் தொகையை எஸ்டேட் அபாலிஷன் ட்ரிப்யூனலிடம் தாக்கல் செய்து விடுகிறார்கள். அந்தப் பணம் அந்த நிலத்தின் சொந்தக்காரருடைய பணமாகும். அதை சர்க்கார் எடுத்துக்கொள்வது நியாயமில்லை. ப்ராமிசரி நோட்டுக்கு 3 வருட காலாவதியிருக்கிறது. பந்தகத்திற்கு 12 வருட காலாவதியிருக்கிறது. அப்படியிருக்க, அதற்கு மட்டும் ஆறு மாத கெடு என்றால்? எக்ஸ்க்யூஸ் செய்து ஒரு ஆறு மாத கெடு. அதற்குமேல் அப்பணம் கொடுக்கத் தக்கதல்ல என்றால் சொந்தக்காரர்கள் என்ன செய்வது? நஷ்டயீட்டுத் தொகையை சர்க்கார் எடுத்துக்கொள்ளப் போவதில்லை என்று சொல்லியிருக்கிறார்கள். மனு போட்டு வாங்க முடியாத நிலையில் அவர்கள் பணத்திற்கு என்ன செய்வது? சிவில் கோர்ட்டில் பணத்தைக் கட்டினால் அதை முதலாளி வாங்காவிட்டால் அது அங்கேயேயிருக்கிறது. அதற்கு காலாவதி கிடையாது. மூன்று வருடம் கழித்து லாப்ஸாகும். பின் அக்கௌண்டண்ட்-ஜெனரலிடம் போய் வாங்கவேண்டும். ஆக, நான் சொல்வது யார் சொத்தை நாம் எடுத்துக் கொள்கிறோமோ அவருக்குத்தான் அந்த நஷ்டயீட்டுத் தொகை. அது அவருடையது. ஆகவே, ஒரு காலாவதி நிர்ணயம் செய்துவிட்டு அதற்குப் பிறகு அதை சர்க்கார் எடுத்துக்கொள்ளக்கூடாது. சேலம் ஜில்லாவில் 50 சத விகிதம் மனு காலாவதியாகிவிட்டது என்று தள்ளுபடியாகியிருக்கிறது என்று லெட்டர் வந்திருக்கிறது. தஞ்சையில், இந்தச் சட்டம் சம்பந்தப்பட்ட வரையில் எனக்கு அனுபவம் இருப்பதால் எனக்கு தெரியும் எவ்வளவு காலாவதியாகிப் போய்விட்டன என்பது. ஆறு மாதங்களுக்கு மேலாகி விட்டது, காலாவதியாகி விட்டது, ஆகவே காம்பன்சேஷன் கொடுக்க அதிகாரமில்லையென்று தள்ளுபடி செய்யப்பட்ட மனுக்கள் அங்கு ஜாஸ்தி. டெப்பாஸிட் செய்தது ஜனவரியில் என்றால் நோட்டீஸ் செல்வது செப்டம்பரில்.

இந்தச் சட்டம் கொண்டுவந்திருப்பது நியாயம்தான். டைரக்டருக்கு இந்த அதிகாரம் இருக்க வேண்டும். யாருடைய நிலத்தை நாம் பொதுக் காரியத்திற்காக, பொது நன்மைக்காக எடுத்துக் கொள்கிறோமோ அவருக்கு அதற்குள்ள காம்பன்சேஷன் உடனடியாகப் போய்ச் சேரவேண்டும். அதை சர்க்கார் எடுத்துக் கொள்ளாமல் சிவில் கோர்ட்டில் டிப்பாஸிட் செய்யவேண்டும். இது குறித்து நான் என் மசோதாவில் விளக்கமாக குறிப்பிட்டிருக்கிறேன். அந்தத் திருத்தங்களை சர்க்காரே கொண்டு வருவதாக சொல்லியிருக்கிறபடியால் அதை சீக்கிரம் கொண்டுவந்து நிறைவேற்றி, காம்பன்சேஷன் உடனடியாக போய் சேருவதற்கு வேண்டியதைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

23rd February 1961] [Sri R. Srinivasa Iyer]

பின்னர், இன்னொன்று சொல்ல வேண்டியிருக்கிறது. அதாவது இந்த நோட்டீஸ்கள் எல்லாம் போர்ட் செண்ட் ஜார்ஜ் கெஜெட்டில் வருகிறது. தாலூகா ஆபீஸ் போர்டுகளிலும் போடுகிறார்கள். எஸ்டேட் அபாலிஷன் டிரிப்யூனல் ஆபீஸ் போர்டிலும் போடு கிறார்கள். ஆனால் எவ்வளவு பேர்கள் கெஜெட் வாங்கிப் பார்க்கிறார்கள் என்று ஆலோசிக்கவேண்டும். கந்தர்வ கோட்டையில் 3¾ எக்கர் நிலம் உள்ள ஒருவருக்கு 50 ரூபாய் ஒரு வகையில் காம்பன்சேஷன் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் அங்கு அலைந்து, மனு போட்டு இப்படி பல சிரமங்கள்பட்டு இந்தச் சிறு தொகையை வாங்கப் போகிறார்களா, என்ன? தஞ்சையில் 1,115 இனம் எஸ்டேட்கள் இருக்கின்றன. இவ்வளவு பேர்களும், அங்குள்ள போர்டை போய் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா அல்லது கெஜெட்டைப் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? இவ்வளவு தொகை டெப்பாஸிட் செய்யப்பட்டு விட்டதென்று, யாரிடமிருந்து நிலத்தை எடுத்தோமோ அவருக்கு ரெஜிஸ்டேர்ட் தபாலில் நோட்டீஸ் அனுப்பவேண்டுமென்று ரூலிருக்கிறது. ஆனால் அப்படிச் செய்யப்படுவதில்லை. ஆக, பலவித சிக்கல்கள் இருக்கின்றன. அவைகளையெல்லாம் நன்கு ஆராய்ந்து பார்த்து எல்லாச் சிக்கல்களையும் ஒரேயடியாக தீர்க்க வேண்டும். ஆகவே, நஷ்டயீட்டுத் தொகையை நியாயமான முறையில் வட்டியில்லாமலாவது கூடிய சீக்கிரம் கொடுக்க வேண்டிய வழிவகைகள் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு நான் இந்த மசோதாவை ஆதரிக்கிறேன்.

SRI J. MATHA GOWDER: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த சட்டம் நிறைவேற்றப்பட்டு 12 வருடங்களுக்கு மேலாகியும் இன்றுதான் இது மீண்டும் இந்த சட்ட மன்றத்தின் முன் வந்திருக்கிறது. 12 ஆண்டுகளுக்கு முன் ஒரு சட்டத்தை எற்படுத்தி இப்பொழுது அதற்கு திருத்தம் கொண்டுவரக்கூடிய நிலையில் இருப்பதைப் பார்க்கும்போது பரிதாபகரமாகத்தான் இருக்கிறது.

(Deputy Speaker in the Chair.)

ஒரு சட்டத்தை நாம் எற்படுத்திய பிறகு 2, 3 வருடத்திற்குள்ளாக நடைமுறையில் என்னென்ன கஷ்டங்கள் இருக்கின்றன என்று அந்த இலாகா பரிசீலனை செய்து உடனடியாக அதற்கு வேண்டிய திருத்தங்களை கொண்டுவந்திருந்தால் இவ்வளவு காலதாமதம் எற்பட்டிருக்காது. இந்த ஆக்ட் 1948-ல் வந்தும் கூட நீலகிரி ஜில்லாவைப் பொறுத்தவரையில் கூடலூர் தாலூகாவில் 12 வருடங்களாகியும் அங்கு ஆரம்ப வேலைகள் கூட இன்னும் செய்யவில்லை. 12 வருட காலத்தில் ஒரு ஆபீசரைக் கூட நியமிக்காமல் அங்கு யாதொரு வேலையும் தொடங்கப்படாமல் இருப்பது குறித்து என்னால் ஒன்றுமே புரிந்துகொள்ள முடியவில்லை. இந்த சபையில் அமைச்சர் அவர்களிடம் நான் ஒரு கேள்வி

[Sri J. Matha Gowder] [23rd February 1961

போட்டிருந்தேன். அதாவது நீலகிரியில் உள்ள கூடலூர் பகுதியில் ஜன்மி ஒழிப்பு ஏன் செய்யவில்லை, அதற்கு காரணமென்ன, என்று கேட்டபோது அமைச்சர் அவர்கள் ஒரேயடியாக பதில் சொல்லி விட்டார்கள், அந்த ஜில்லாவில் ஜன்மியே கிடையாது என்று. இதனுடைய காரணம் என்னவென்று எனக்குப் புரியவில்லை. நீலகிரி ஜில்லாவை மறந்து விட்டார்களோ என்று நினைக்க தோன்றுகிறது. நான் இதில் ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்பு கிறேன். இம்மாதிரியான எஸ்டேட் அபாலிஷன் சட்டம் ஏற்படுத்திய பின்னும் முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் என்ன பலன் ஏற்பட்டிருக்கிறது என்பதை சர்க்கார் பரிசீலனை செய்து பார்க்கவேண்டும். அதற்கு மேல் இரண்டாவது ஐந்தாண டுத் திட்டம் முடிவடைந்திருக்கிறது. இந்தக் காலத்திலும் ஜமீன் ஒழிப்புக்காக என்ன வேலை செய்யப்பட்டிருக்கிறது என்பதையும் அரசாங்கம் பரிசீலிக்க வேண்டும். இதைப்பற்றி நன்றாக ஆராய்ந்து பார்த்தால் உருப்படியாக எந்த வேலையும் செய்ய முடியவில்லை. பல இடங்களில் விளாக்குகளை அமைத்து அதற்கான ஆபீஸர்களை போட்டிருக்கிறோம். விஸ்தரிப்புத் திட்டம் என்று சொல்லி பல இடங்களை விஸ்தரித்துக்கொண்டே போகிறோம். ஆனால் இவை களில் எந்த விதமான வேலையும் செய்ய முடிவதில்லை. எந்த வேலை செய்ய வேண்டுமென்றாலும் நில சொந்தக்காரர்களிடத்தில் அக்ரிமெண்ட். வாங்கின பின்னால்தான் எந்த வேலையும் செய்ய முடியும் என்ற நிலை இருக்கிறது. எந்த இடத்தை எடுத்துக் கொண்டாலும் அதன் சொந்தக்காரர்கள் அக்ரிமெண்ட் இல்லாமல் அதில் கிணறு வெட்டக்கூடாது, வீடுகள் கட்டக்கூடாது, அதிலுள்ள மரங்களை வெட்டக்கூடாது, பள்ளிக்கூடம் கட்டக் கூடாது, ரோடு போடக் கூடாது, இவ்விதம் ஒரு வேலையும் செய்யக் கூடாது. இவ்விதம் நிலச் சொந்தக்காரர்களின் அக்ரிமெண்ட் இல்லாமல் எந்த வேலையும் செய்யக் கூடாது என்றிருப்பதினால் சமுதாய வளர்ச்சித் திட்டத்தில் எந்த விதமான வேலையும் செய்ய முடியாமல் இருக்கிறது. கூடலூர் வட்டார வளர்ச்சித் திட்டத்தின் கீழ் என்ன வேலை செய்திருக்கிறார்கள் என்று கணக் கெடுத்துப் பார்த்தால் பூஜ்யம்தான் இருக்கும். எந்த விதமான வேலையையும் அங்கு செய்ய முடியவில்லை. இதனால் நான் அங்குள்ள அதிகாரிகளை குறை சொல்லுவதாக யாரும் நினைக்க வேண்டாம். அங்குள்ள நிலை இம்மாதிரி இருக்கிறது. அதைப் பற்றி கனம் அமைச்சர் அவர்களிடத்தில் நேரிடையாகவே சொல்லி யிருக்கிறேன். இந்த நிலையைப் பார்க்கும்போது மக்களுக்காக நாம் என்ன செய்திருக்கிறோம் என்று பார்த்தால் ஒன்றும் இல்லை என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. இவைகளை நிவர்த்தி செய்ய இலாகாக்கள் எல்லாம் துரிதமாக வேலை செய்யவேண்டும். இந்த ஆண்டில் அந்த ஜில்லாவுக்கு ஒரு ஆர்.டி.ஓ. போட்டிருப்ப தாக கேள்விப்படுகிறேன். அதிலும் முதலாவது போட்ட ஆர்.டி.ஓ. அங்கு வரவில்லை என்றும், இப்போது ஒருவரை அதற்கடுத்த படியாக போட்டிருப்பதாகவும் அறிகிறேன். அதிகாரிகள் அங்கு

**23rd February 1961]** [Sri J. Matha Gowder]

வருவதற்கு இஷ்டமில்லாமல் இருந்தால் அதற்கு காரணம் என்ன என்பதையும் நாம் பார்க்கவேண்டும். அவர்களுக்கு என்ன இடைஞ்சல் இருக்கிறது என்பதையும் நாம் பார்க்கவேண்டும். அவர்களுக்கு கூடலூர் போன்ற பகுதிகளுக்கு வரவேண்டும் என்றால் ஏதாவது ஸ்பெஷல் அலவன்ஸ் கொடுக்கவேண்டு மென்றால் அதையும் கொடுக்கவேண்டும். முன்பு அந்த இடத்தில் வேலை செய்யும் அதிகாரிகளுக்கு மலேரியா அலவன்ஸ் கொடுக்கப்பட்டு வந்தது. இப்போது அங்கு மலேரியா இல்லை என்ற காரணத்திற்காக அந்த அலவன்ஸ் நிறுத்தப்பட்டுவிட்ட தாகவும் தெரிகிறது. ஆகவே அவர்களுக்கு கூடுதல் ஊதியம் ஏதாவது வேண்டுமென்று விரும்பினால் அதை கொடுப்பதற்கும் அரசாங்கம் முன்வரவேண்டும். அவர்கள் அங்கு போய் வேலை செய்வதற்கு என்ன அசௌகரியங்கள் இருக்கின்றன என்பதை அரசாங்கம் பரிசீலனை செய்து பார்த்து அதற்கு தகுந்த ஒரு ஊதியத்தை கொடுக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன். இந்த சட்டம் இயற்றி 12 ஆண்டுகள் ஆகியும் கூட இப்போதுதான் ஆரம்ப வேலை நடைபெற ஆரம்பித்து இருக்கிறது என்றால் எங்கள் கூடலூர் பகுதியில் இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத் திற்குள் என்ன வேலைகள் நடைபெறும் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆகவே இந்த ஐந்தாண்டுத் திட்டத்தி லாவது அந்தப் பகுதிகளுக்கு என்ன வேலையை ஆரம்பிக்க முடியும் என்பதைப்பற்றி அரசாங்கம் உடனடியாக பரிசீலிக்க வேண்டும். அதற்கு முன்னதாக ஒரு விஷயத்தை நான் தெரிவித்துக்கொள்கிறேன். ஜமீன் ஒழிப்புக்குப் பிறகு பட்டா செய்வதற்கு வேண்டுமென்றால் கண்டிஷன் ஏற்படுத்தலாம். இதற்கு சர்வே செய்வதற்கும் ஏராளமான அதிகாரிகள் வேண்டும் என்று சொல்லக்கூடும். அதற்கு முன்னதாக சமுதாய வளர்ச்சித் திட்டத்தின் மூலமாக வேலைகள் நடைபெறுவதற்கு உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும். இந்த வேலை களுக்காக எடுக்கப்பட்ட நிலங்களுக்கு என்ன காம்பன்சேஷன் நிர்ணயித்திருக்கிறோமோ அதை கொடுக்கவேண்டும். பல இடங் களில் நஷ்டஈடு கொடுத்துக்கொண்டிருக்கிறோம். இதன் கீழ் வேலை நடைபெறுவதற்கு துரிதமாக ஏதாவது மாற்றி அமைக்கவேண்டுமானால் அதையும் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இப்போதுள்ள நிலையில் அந்த ஒரு ஜில்லாதான் இப்படி இருந்து கொண்டிருக்கிறது. மற்ற ஜில்லாக்களுக்கு எல்லாம் வருடந்தோறும் நஷ்ட ஈடு கொடுப்பதற் காக மான்யக் கோரிக்கை கொண்டு வரப்படுகிறது. ஆனால் நீலகிரி ஜில்லாவுக்கு மட்டும் எந்தவிதமான நடவடிக்கையும் எடுத்திருப் பதாக தெரியவில்லை. ஆகவே இதை அமைச்சர் அவர்கள் மனதில் கொண்டு தயவுசெய்து உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டு மென்று பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன். அதோடு எங்கள் பகுதியில் 99 வருட லீஸ் கொடுத்திருப்பது எந்த அடிப்படையில் வரும் என்று தெரியவில்லை. ஆகவே இந்த சட்டம் வரும்போது

ரயத்வாரி அனுசரித்து பட்டாக் கொடுப்பதற்கும் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு இந்த மசோதாவை ஆதரித்து என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

SRI S. M. ANNAMALAI : **கனம் சட்ட மன்ற உதவித் தலைவர்** அவர்களே, இதன் மீது நான் கொடுத்திருக்கும் திருத்தப் பிரேரணை என்னவென்றால், இந்த மசோதாவை ஜாயின்ட் செலெக்ட் கமிட்டிக்கு அனுப்பவேண்டும் என்பதுதான். இதிலுள்ள பல குறைகளைப்பற்றி கனம் லாசர் அவர்களும், மற்றும் பல அங்கத்தினர்களும் நன்றாக சொன்னார்கள். இந்தச் சட்டம் 1948-ல் நிறைவேற்றப்பட்டு, அதன் பின்னால் இந்தச் சட்டத்தில் பலவித ஊழல்கள் இருக்கின்றன என்று பலராலும் சொல்லப்பட்டது. ஆகவேதான் இதை ஜாயின்ட் செலெக்ட் கமிட்டிக்கு அனுப்ப வேண்டும் என்று சொல்லியிருக்கிறேன். கிராமப்புறங்களில் ஜாகீர் போன்றவைகள் இருக்கின்றன, அவைகளை எல்லாம் நாம் நன்றாக பரிசீலிக்க வேண்டியிருக்கிறது. உதாரணமாக செக்ஷன் 11-ல் பட்டா கொடுப்பதைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. உதாரணமாக ஏரி எதிர்வாய்களில் உள்ள நிலங்களுக்கு பட்டா வழங்குவதற்கு 1939-லிருந்து சுவாதீனம் இருக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சாதாரணமாக பட்டா ஜாகீர் நிலத்தில் ஒரு ஆளினுடைய பெயரில் இருக்கும். சுவாதீனம் இன்னொரு ஆளினுடைய கையில் இருக்கும். அதோடு ஏரி எதிர்வாயில் 4 எக்கர் நிலம் ஒரு ஆளின் கையில் இருந்தால் 3 எக்கர் 90 சென்டு நிலத்தை விட்டுவிட்டு வெறும் 10 சென்டுக்கு மட்டும் சர்க்கார் பட்டா கொடுக்கிறார்கள். அதோடு இவ்விதம் பட்டா செய்து கொடுக்கும் 10 சென்ட் நிலத்தில் பம்பு செட் இருக்கும். இதற்காக ஆண்டு ஒன்றுக்கு மினிமம் கட்ட வேண்டிய ரூபாய் 250-ம் கட்ட வேண்டும். இப்படி 10 சென்டு நிலத்திற்கு மட்டும் செலவு செய்ய முடியுமா என்பதை நாம் சிந்தித்து பார்க்கவேண்டும். இதை எதிர்த்து பல அப்பீல்கள் ரெவின்யூ போர்டில் இருக்கின்றன. இதைப்பற்றி நேரடியாகவும் அமைச்சர் அவர்களிடத்தில் சொல்லியிருக்கிறேன். இதன் காரணமாக ஆரணி ஜாகீர் வட்டாரத்தில் பல பட்டாதார்கள் பாதிக்கப்பட்டிருக்கின்றனர். ஏரி எதிர்வாயில் நிலங்கள் இருக்கின்றன என்ற காரணத்தின் பேரில் பல ஏக்கர் நிலங்கள் இதுவரையும் பட்டா செய்யப்படாமல் இருந்து வருகின்றன. ஏரியுடைய கரை தூர்ந்து போகும் என்று சொல்லி இதை புறம்போக்காக நாங்கள் எடுத்துக்கொள்கிறோம் என்று சொல்லுகிறார்கள். இவ்விதம் கிரயம் கொடுத்து சர்க்கார் 6,000, 7,000 எக்கர்கள் வரையிலும் எடுத்திருக்கிறார்கள். ஒரு விவசாயிக்கு 4 எக்கர் நிலம் இருந்தால் 10 சென்டை மட்டும் பட்டா செய்து கொடுத்துவிட்டு 3 எக்கர் 90 சென்டை விட்டு விடுகிறார்கள். பட்டா செய்து கொடுத்த இடத்தில்தான் கிணறு இருக்கிறது, பம்ப் செட் இருக்கிறது. இதற்காக ஆண்டு ஒன்றுக்கு மினிமம் கட்டணமாக 250 ரூபாய் செலுத்த வேண்டும். அதோடு சர்க்கார்

23rd February 1961] [Sri S. M. Annamalai]

எடுத்துக்கொள்ளும் நிலங்களுக்கு காம்பன்ஸேஷன் சரியாக கிடைப்பதில்லை. எடுத்தவுடன் காலி செய்யவேண்டும் என்று ஆரும் நம்பர் நோட்டீஸ் கொடுக்கிறார்கள். இந்த ஜாகிர் நிலங்கள் தங்கள் கைவசம்தான் இருக்கின்றன என்பதற்கு 1939-லிருந்து தங்களிடத்தில்தான் இருக்கின்றன என்று ரிக்கார்டு காண்பிக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். கிராமப்புறங்களிலுள்ளவர்கள் இதற்கு எவ்வாறு ரிக்கார்டு கொடுக்க முடியும் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். வேண்டுமென்றால் கிராமத்தில், சுற்றுப்புறத்திலுள்ளவர்கள்தான் இதைப்பற்றி சொல்ல முடியும். உண்மையாகவே நிலைமை என்னவென்றால் ஜாகிர் நிலங்களில் ரயத் ஒருவனிடத்தில் இருக்கும். ஸ்வாதீனம் இன்னொருவனிடத்தில் இருக்கும். இவ்விதம் இருப்பதால் இதற்கு சரியான ரிக்கார்டு அவர்களால் காண்பிக்க முடிவதில்லை. இந்தக் காரணத்தை ஒட்டி ஆரணி ஜாகிர் பகுதியில் பல ஆயிரக்கணக்கான எக்கர்கள் புறம் போக்காக ஆக்கப்பட்டிருக்கின்றன. இதன் காரணமாக சிறு சிறு ஏழைகள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

அதேபோலவேதான் சர்வே செய்வது. ரயத்வாரியாக மாற்றும்போது சர்வே அண்ட் செட்டில்மெண்ட் பார்ட்டி அவர்கள் 11 a.m. செய்திருக்கக்கூடிய அக்கிரமத்தை என்னால் கூட சொல்ல முடியாது. அந்த அளவுக்கு அக்கிரமம் செய்திருக்கிறார்கள். அவரவர்கள் அந்த பார்ட்டியை எப்படி எப்படி பயன்படுத்திக் கொண்டார்களோ அந்த முறையில் அவர்கள் செய்திருக்கிறார்கள். ஒருவனுக்கு 2 எக்கர் 10 செண்ட் இருந்தால் அவனுக்கு 2 எக்கர் 50 சென்ட்க்கு பட்டா வழங்கி விட்டிருக்கிறார்கள். ஒருவனுக்கு 4 எக்கர் இருந்து வந்த அதிகாரியை சரிவர கவனிக்கவில்லையென்றால் அவனுக்கு 3 எக்கர் 50 செண்ட் என்று குறைத்து பட்டா வழங்கப்பட்டிருக்கிறது. வரப்பு ஒரு புறம் இருக்கிறது, வேறு ஒரு புறத்தில் சர்வே கல்லைப் போட்டிருக்கிறார்கள். அவர்களைக் கேட்டால் நாங்கள் செய்ததுதான் சரி என்று சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்கள். நிலச் சொந்தக்காரர்கள் கிராம மக்களாக இருப்பதால் எந்தக் காலத்தில் அப்பீல் செய்யவேண்டுமென்று தெரியாமல் அப்படியே விட்டுவிட்டிருக்கிறார்கள். இப்போது அப்பீல் செய்யவேண்டுமென்று நினைத்தால் காலம் போய்விட்டது, ஆகையால் உங்களுடைய அப்பீலைத் தள்ளுபடி செய்கிறோம் என்று ரெவின்யூ போர்டிலிருந்து உத்திரவு வருகிறது. இதையெல்லாம் ஆராய்ந்து பார்க்கவேண்டியிருக்கிறது. அத்துடன் எரி எதிர் வாய் நிலங்களை மறு பரிசீலனை செய்யவேண்டியிருக்கிறது. இதைப்போலவே பல செக்ஷன்கள் இருக்கின்றன. அவைகளையும் நல்ல முறையில் பரிசீலனை செய்யவேண்டுமென்றுதான் இந்த மசோதாவை ஒரு கூட்டு பொறுக்குக் குழுவுக்கு அனுப்பவேண்டுமென்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். காலதாமதம் ஆகாமல் இந்த மாதத்திலேயே கூட முடித்து விடலாம். கூட்டுப் பொறுக்கு குழுவிற்கு அனுப்பினால் சட்ட மன்ற உறுப்பினர்களை நேரடியாகக்

கலந்து இதிலுள்ள கஷ்ட நஷ்டங்களை ஆராய முடியும். ஆகவே இதை அமைச்சர் ஏற்றுக்கொண்டு இதை கூட்டு பொறுக்குக் குழுவிற்கு அனுப்பவேண்டுமென்று மிகத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்.

* THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இதற்கு முன்பு இருந்த சட்டம் எஸ்டேட் லாண்ட் ஆக்ட் என்று பெயர். அதை ஒழிக்கக்கூடிய சட்டம்—அபாலிஷன் ஆக்ட் உலகத்திலேயே மிகச் சிக்கலான சட்டம் என்று நீதி மன்றத்திலேயே சொல்லியிருக்கிறார்கள். அந்தச் சட்டத்தை ஒழிக்கக்கூடிய இந்தச் சட்டமும் அதே பாம்பரையில் இதுவும் சிக்கலாக இருக்கிறது. அப்போதைக்கப்போது சிக்கல்கள் ஏற்படு கின்றன. எவ்வப்போது சிக்கல்கள் வருகின்றனவோ அவ்வப் போது திருத்த மசோதாவைக் கொண்டுவந்து நிறைவேற்று கிறோம். இந்த மசோதா ஒரே ஒரு விஷயத்தைப்பற்றித்தான். அதாவது டைரக்டர் ஆப் செட்டில்மெண்ட் ஒரு முடிவுக்கு வந்தால் அதை இப்போது அவரே திருத்த முடியாது. அது போர்டுக்குப் போய் சம்பிரதாயத்தோடு செய்யவேண்டும். அப்படிக்கில்லாமல் சில காரணங்களுக்காக திருத்தம் வேண்டு மென்று நினைத்தால் டைரக்டர் ஆப் செட்டில்மெண்ட் அவர்களே செய்யலாம் என்று அவருக்கு அதிகாரம் கொடுப்பதற்காகக் கொண்டுவரப்பட்டிருக்கிறது இந்த மசோதா. அப்படி அவர் முடிவு செய்வதற்கும், அப்பீல் செய்வதற்கும் இடம் இருக்கிறது. பிரச்னை இதுதான். ஆனால் இதிலிருந்து என்னென்னமோ கிளம்பி விட்டது. அதுவும் கனம் நீலகிரி அங்கத்தினர் என்னவோ பேசினார். அவர் பேசியதற்கும் இந்த பில்லுக்கும் சம்பந்தமில்லை. அங்கு மலபார் டெனன்ஸி ஆக்ட் இருக்கிறது. ஜன்மி, குடியிருப்பு இந்தமாதிரி மலையாளத்தில் என்னென்னமோ இருக்கின்றன. ஒன்று அல்லது ஒன்றரை ஆண்டுகளுக்கு முன்பு நீலகிரிக்குப் போயிருந்தபோது இதைப்பற்றி பிரஸ்தாபம் செய்யப்பட்டது. அதற்காக கலெக்டர் போன்றவர்களைச் சேர்த்து ஒரு கமிட்டி மாதிரி போட்டு விசாரணை செய்யச் சொன்னோம். இருக்கக்கூடிய சிக்கலைத் தீர்க்க உத்தியோகஸ்தர்களை நியமித்தோம். நியமிக்கப் பட்ட உத்தியோகஸ்தர்கள் போகவில்லை என்று சொன்னார்கள். அது துரதிர்ஷ்டம்தான். உத்தியோகஸ்தர்கள் போகவில்லை யென்றால் அவர்கள் காய்ச்சல் முதலிய காரணங்களினால் போகாமல் இருந்திருக்கலாம். அதற்கு வேறு உத்தியோகஸ் தர்களைப் போட்டு இந்தப் பிரச்னை தீர்க்கப்படும். அந்தப் பிரச்னைக்கும் இந்தப் பிரச்னைக்கும் சம்பந்தமில்லை.

இன்னொரு கனம் அங்கத்தினர்—அண்ணாமலை அவர்கள்—பொறுக்குக் கமிட்டி வேண்டுமென்று சொன்னார்கள். இப்போது திருத்தப்படவேண்டியது ஒன்றே ஒன்றுதான். டைரக்டர் ஆப் செட்டில்மெண்ட்தான் செய்தது தப்பாக இருந்தால் அவரே அதைத் திருத்தலாம் என்று அதிகாரம் கொடுக்கப்போகிறோம்.

இதில் பொறுக்குக் கமிட்டி என்ன செய்யப்போகிறது என்று தெரியவில்லை. ஆகையால் இந்தப் பிரச்னைக்கு அது வேண்டிய தில்லை. இன்னொன்று ஏரி எதிர்வாய் நிலங்களில் பட்டா கொடுத்தும் அப்புறப்படுத்தப்படுகிறார்கள் என்று சொன்னார்கள். ஜமீன்தார்கள், ஜாகீர்தார்கள் நிர்வாகம் சர்க்கார் நிர்வாகம் மாதிரி நடப்பதில்லை. அது ஒரு தனிப்பட்ட நிர்வாகம். ஏதோ நடக்கும். பட்டா கிடைக்கக்கூடாதவர்களுக்குக் கொடுப் பார்கள்—கொடுக்கக்கூடாத இடத்திற்குக் கொடுப்பார்கள். அதை வாங்கி அனுபவித்திருக்கலாம். சர்வே செய்த போது பார்த்தால் ஏரி எதிர்வாய் நிலங்களுக்குக் கூட பட்டா வழங்கியிருக்கிறார்கள். 10 அல்லது 15 வருஷமாக அனுபவித்துக்கொண்டிருக்கலாம். ஏரி எதிர்வாயில் சாகுபடி செய்தால் ஏரி ஆயக்கட்டு நிலங்களை அது பாதிக்கும். ஆகையால் ஏரி எதிர்வாயில் சாகுபடி செய்யக்கூடாது. அதைக்கூட தளர்த்தியிருக்கிறோம். நீர்ப்பிடிப்பு இருக்கும் காலத்தில் மாத்திரம்—குறைந்த அளவு ஒரு மாதம்—கூடாது என்றுதான் சொல்லுகிறோம். மற்ற நிலங்களில் சாகுபடி செய்யக்கூட அனுமதித்து வருகிறோம். இதெல்லாம் இந்த மசோதாவிற்குச் சம்பந்தமில்லை. ஏதோ சொன்னாரே என்றுதான் நானும் பதில் சொன்னேன்.

இது விஷயமாக "அப்ரோப்ரியேட்"-ஆகப் பேசியவர்கள் வக்கீல்கள்தான். வக்கீல்களுக்கு எப்போதுமே சப்ஜெக்டைக் குறித்துப் பேசும் பழக்கம் ஏற்பட்டு விடுகிறது. அதனால்தான் அவர்கள் பேசினார்கள். கனம் சீனிவாச அய்யர் அவர்கள் சில விஷயங்களைப்பற்றிப் பேசினார்கள். ஒரு சங்கடத்தைத் தீர்க்கத் தான் இந்த மசோதா கொண்டுவரப்பட்டுள்ளது. இன்னும் சில விஷயங்களைச் சேர்த்து ஒரு மசோதா கொண்டுவரவேண்டுமென்ற உத்தேசம் இருக்கிறது. காம்பென்ஸேஷன் டைம் லிமிட்டைக் குறைத்ததால் 50 சத விகிதம் மனுக்கள் தள்ளுபடியாகிவிட்டன என்று சொன்னார்கள். நோட்டிபை செய்து விடுகிறோம், தனியாக நோட்டீஸ் கொடுக்கவேண்டுமென்றிருக்கிறது. ஆகையால், ஸீரியேட்டிமாக கனம் அங்கத்தினர் எழுதிக் கொடுத்தால் எல்லா வற்றையும் பரிசீலனை செய்து நாங்கள் ஒரு மசோதா கொண்டு வரலாம்.

கனம் லாஸர் அவர்கள் பேசும்போது இந்தமாதிரியான சிக்கல்கள் இருக்கின்றன என்று சொல்லி இப்போதாவது மசோதா வந்ததைப்பற்றி பாராட்டினார். ஆக, நான் முன் சொன்னதுபோல இது ஒரு சிக்கலான சட்டம். சிக்கலான பிரச்னைகள் அடிக்கடி வருகின்றன. சில சமயத்தில் திடீரென்று வருகின்றன—முதலில் தெரிவதில்லை. ஒரு சட்டத்தில் நிறைய திருத்தங்கள் இருக்கின்றன என்றால் அது இந்தச் சட்டத்திற்குத் தான்—வேறு எந்தச் சட்டத்திற்குமில்லை. நியாயஸ்தலங்களே சொல்லி இருக்கின்றன. அத்தோடு ப்ரிவி கவுன்சில் வரையில்

போயிருக்கின்றது. தாய் சட்டத்தில் இந்த மாதிரி இருந்தால் பரவாயில்லை. ஆனால் அதை ஒழிக்கும் சட்டத்திலும் வந்து கொண்டுதான் இருக்கின்றன. இதையெல்லாம் தீர்க்க பிரயத்தினம் எடுத்துக்கொள்ளலாம். எஸ்டேட்டுகளெல்லாம் சர்வேயாகிவிட்டன—மலைப் பிரதேசம் தவிர எல்லாம் ஆகிவிட்டன. செட்டில்மெண்ட்டும் சீக்கிரம் முடிந்துவிடும் என்று எதிர்பார்க்கிறோம். காம்பென்ஸேஷன் விஷயத்திலே கூட இந்தியாவிலேயே ரொம்ப தாராளமாக நியாயமான முறையில் இந்த மாகாணத்தில்தான் வழங்கப்பட்டது. கூடுமான வரையில் ஹ்யூமன் கெபாஸிட்டியில் எந்த அளவு முடியுமோ அந்த அளவுக்கு நாம் செய்துகொண்டுதான் இருக்கிறோம். சிறிய ஒரு விஷயத்தைப்பற்றி மட்டும் இருப்பதால் இன்னும் நிறைய பிரசங்கம் இல்லாமல் இத்துடன் இதை நிறைவேற்றினால் நான் ரொம்பவும் நன்றியுள்ளவனாக இருப்பேன்.

The amendment was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Amendment Bill, 1961 (L.A. Bill No. 5 of 1961) be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

### *Clause* 2.

DEPUTY SPEAKER : The motion is—

'That clause 2 do stand part of the Bill.'

SRI R. SRINIVASA IYER : Sir, I move the following amendment :

In the proposed amendment to clause 39, Madras Act XXVI of 1948, *for* item (*a*) (4-*a*) (ii) *substitute* the following :—

"A copy of every order under sub-section (1) or under this sub-section shall be communicated to the Board of Revenue and also to every landholder concerned and every applicant under sub-section (2) or this sub-section by Registered Post Acknowledgment due."

The amendment was duly seconded.

SRI R. SRINIVASA IYER : Sir, I move the following amendment :—

"In the proposed amendment to clause 39, Madras Act XXVI of 1948, in item (*a*) (4-*a*) (ii), *add* at the end the words " by Registered Post Acknowledgment due ".

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

23rd February 1961]

SRI R. SRINIVASA IYER : என்னுடைய மூன்ருவது திருத்த மானது இந்தத் திருத்தத்திலே இருந்து ஏற்பட்டது. இந்த இரண்டாவது கிளாசிலே "ஏ" என்கிற, சப்-கிளாசிலே 2 (i) என்பதிலே கீழ்க்கண்டவாறு இருக்கிறது :—

"A copy of every order passed under this sub-section shall be communicated to the Board of Revenue, and also to every land-holder concerned, and every applicant under this sub-section and sub-section (2)."

"கம்யூனிகேட்" என்று இருக்கிறது. சாதாரணத் தபாலிலே அனுப்பலாம் என்ற அர்த்தம்பட இருக்கிறது. சாதாரணமாக ஒரு தாசில்தார் ஆபிசிலுள்ள பியூன் ஒரு தபாலே எடுத்துக்கொண்டு போய், உரிய நபர் இல்லை என்று வந்து சொல்லி விடுவதற்கும் இதில் இடமிருக்கிறது. ஆகவே, இதை "பை ரிஜிஸ்டர்ட் போஸ்ட், அக்னுலெஜ்மெண்ட் டியூ" என்று போட்டால் கொஞ்சம் சவுகரியமாக இருக்குமென்பதுதான் என்னுடைய திருத்தம். ஒருவருடைய நிலத்தை எடுத்துக்கொண்டு, அதற்கான பேசிக் சம் நிர்ணயிக்கப்பட்டு, கையெழுத்துப் போட்டுக் கொடுக் கப்படுகின்ற ஒரு கடிதத்தை "பை ரிஜிஸ்டர்ட் போஸ்ட், அக்னு லெஜ்மெண்ட் டியூ" என்று போட்டு, அனுப்புவது மிகவும் நல்லது என்று நான் நினைக்கிறேன். எனக்கு வந்துள்ள அறிவிப் பிலிருந்து, இதற்கு அதிகச் செலவாகும் என்று சொல்லப்படுகிறது. இது ஒரு பெரிய செலவு அல்ல. செலவாகவும் கருதக்கூடாது. அப்படி ரிஜிஸ்தர் மூலம் அனுப்பாவிட்டால், நேராகச் சென்று தபாலேக் கொடுத்து, கையெழுத்து வாங்கிக் கொண்டு வருவதும் சாத்தியமில்லை. ஆகையால் இப்படிப் போட்டால்தான், தபாலுக் குரிய நபர் இல்லாவிட்டாலும், "ரெபியூஸ்ட்" என்று போட்டுத் திரும்பி வந்தால் பின்னால் எடுத்துச் சொல்வதற்கும் வசதியாக இருக்கும். இது நில ஆர்ஜிதம் சம்பந்தமானது. ஒருவருடைய சொத்தை ஆர்ஜிதம் செய்து, காம்பென்சேஷன் கணக்குப் போட்டு, பேசிக் அன்னியூவல் சம் கணக்குப் போட்டு, ஒருவருக்கு கடிதம் அனுப்பும்போது அதை ரிஜிஸ்தர் தபாலில் அனுப்புவதுதான் நல்லது. இது சப்-கிளாஸ் 4-ல் இருக்கிறது. அமைச்சர் அவர்கள் கொண்டுவரும் சட்டத்தில் இப்போது விவாதிக்கப்படுவது 39-வது செக்ஷன். இதில் "கம்யூனிகேட்" என்றுதான் போட்டிருக்கிறது. அதாவது சாதாரணத் தபாலில் அனுப்பலாம் என்றிருக்கிறது. என்னுடைய ஒரு திருத்தம், இதை மாற்றி ரிஜிஸ்தர் தபாலில் அனுப்ப வேண்டுமென்பது. ஐந்தாவது ஷரத்தினுலே கீழ்க் கண்டவாறு சொல்லப்பட்டிருக்கிறது.

"In the proposed amendment to clause 39, Madras Act XXVI of 1948, in item (*a*) (4-*a*) (ii), *add* at the end the words "by Registered Post Acknowledgment due".

இரண்டும் ஒரே திருத்தம்தான். முதல் திருத்தத்தை ஒப்புக் கொண்டால், அதற்குள்ள திருத்தத்தை இரண்டாவது திருத்தத் திலே போட்டால் போதுமானது. ஆகவே ஒருவருடைய

சொத்தை அல்லது எஸ்டேட்டை எடுத்துக்கொண்டு, அன்னியூவல் பேசிக் சம் நிர்ணயிப்பதில் ரிவியூ செய்யும்போது, எந்தெந்த நிலத்தை, எந்தெந்த முறையிலே எடுத்துக் கொண்டோம் என்பதை அவர்களுக்கு அனுப்பி, அதை அவர்கள் ஆட்சேபித்து டிரிபியூனலுக்குப் போகும்போது சொல்லப்படுகின்ற புகார்களைத் தவிர்ப்பதற்காக, அவர்களுக்கு அனுப்பப்படும் தபால்களை "ரிஜிஸ்தர் போஸ்ட் அக்னலெஜ்மெண்ட் டியூ" மூலம் அனுப்புவது தான் நல்லது என்பதைக் கவனிக்க வேண்டும். அந்த முறையில் என்னுடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI S. LAZAR: ஸார், கனம் சீனிவாச அய்யர் அவர்கள் கொண்டு வந்த திருத்தங்களின் கருத்தை சர்க்கார் ஏற்றுக் கொண்ட போதிலுங்கூட, இந்தத் திருத்தங்களை ஏற்றுக் கொள்வதற்கில்லை. காரணம், இக்கருத்து பல சமயங்களில் விவாதிக்கப்பட்டு, ஏற்கெனவே விதிகளிலே ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. அப்படி இருக்கும்போது, இதைச் சட்டத் திலேயும் செய்ய வேண்டுமென்பதில்லை.

The Director of Settlements shall communicate every order passed under sub-section (2) and every other sub-section to the land-lord concerned and also every applicant under sub-section (2) in the manner specified in the Bill by sending the orders, free of cost, by registered post acknowledgment due or by getting it served by a messenger.

என்று "ரிஜிஸ்தர் போஸ்ட் அக்னலெட்ஜ்மெண்ட் டியூ" என்று விதிகளிலே ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதால், இதைச் சட்டத் திலும் செய்யவேண்டிய அவசியமில்லையாகையால், நான் இந்தத் திருத்தத்தை ஆதரிக்க விரும்பவில்லை.

SRI T. SAMPATH: It will be all right if there is provision in the Rules.

THE HON. SRI M. A. MANICKAVELU: நான் சொல்ல வேண்டிய பதிலையே ஒருவகையாக ஸ்ரீ லாசர் அவர்கள் சொல்லி விட்டதால், இந்தத் திருத்தம் அவசியமில்லை என்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

SRI R. SRINIVASA IYER: ஸ்ரீ லாஸர் அவர்கள் வாசித்த ரூல் செக்ஷன் 39-ல் மட்டும்தான் வருகிறது. 4 (2) (i)-ல் வரவில்லை. ஆகவே இந்தத் திருத்தத்தை அந்த ரூலிலே செய்துவிட்டால் போதும்.

* THE HON. SRI M. A. MANICKAVELU: These things should be provided for in the Rules. It will be rather clumsy to put it in the Act. So if it is not specifically there in the sub-section, we will provide in the rules.

23rd February 1961]

The amendments were by leave, withdrawn.

Clause 2 was put and carried.

Clauses 3 and 1 were put and carried.

*Preamble.*

DEPUTY SPEAKER : The motion is—

'That the preamble do stand part of the Bill.'

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

"In the preamble *for* the words 'eleventh year' *substitute* the words 'twelfth year'."

This Bill was originally proposed in 1960. But now we are in February 1961. So this amendment is brought forward.

DEPUTY SPEAKER : The question is—

"In the preamble, *for* the words 'eleventh year' *substitute* the words 'twelfth year'."

The amendment was put and carried.

The preamble, as amended, was put and carried.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Amendment Bill, 1961 (L.A. Bill No. 5 of 1961) as amended be passed."

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Madras Estates (Abolition and Converison into Ryotwari) Amendment Bill, 1961 (L.A. Bill No. 5 of 1961) as amended be passed."

SRI T. SAMPATH : உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா சட்டமாகும் தருணத்திலே ஓரிரண்டு கருத்துக்களைச் சொல்ல நான் விரும்புகிறேன். கனம் அமைச்சர் அவர்கள் இந்தச் சட்டம் மிகச் சிக்கலானது என்று குறிப்பிட்டார்கள். இது உண்மையிலேயே ஒரு சிக்கலான சட்டம்தான். 1948-ம் வருஷத்திலே 26-வது சட்டமாக இயற்றப்பட்டது. அதற்குப் பிறகு தொடர்ந்தாற்போல் பல சட்டங்கள் ஏற்பட்டவை. பொது விவாதத்திலே கலந்துகொண்ட நண்பர்கள் ஸ்ரீ லாசர், ஸ்ரீ சீனுவாச அய்யர் ஆகியோர் குறிப்பிட்டார்கள். கனம் அமைச்சர் அவர்கள் பதில் அளிக்கும்போது, இந்தக் கஷ்டங்களை நிவர்த்திக்கக் கூடிய வகையிலே திருத்த மசோதா கொண்டு வருவதாகக் குறிப்பிட்டார்கள். அதைக் குறித்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். அதிலே ஓரிரண்டு கஷ்டங்களைக் குறிப்பிட விரும்புகிறேன். ஒருசில கஷ்டங்களை நண்பர் ஸ்ரீ சீனுவாச அய்யர்

அவர்கள் பேசும்போது குறிப்பிட்டார்கள். அதாவது அட்வான்ஸ் நஷ்ட ஈடு கொடுப்பது. பின்னால் அவர்களிடமிருந்து அந்த அட்வான்ஸ் பங்கு முறையை கணக்குப் பார்த்து வாங்கிக் கொள்ளுவது என்பது. இதிலே பல கஷ்டங்கள் ஏற்படுகிறது.

DEPUTY SPEAKER : I think the Hon. Minister has already replied to that point. How is it relevant now?

SRI T. SAMPATH : The Hon. Minister may consider those points.

இரண்டாவது, இந்த எஸ்டேட்டுகளை எடுத்துக்கொண்டு, அதற்குப் பதில் அவர்களுக்கு காம்பன்சேஷன் பணம் கொடுப்பதில் சிக்கல்கள் ஏற்படுகிறது. பட்டாதார் யார் என்று கண்டு பிடிப்பதிலே பல என்கொயரிகள் மூலம் காலதாமதம் ஏற்படுகிறது. தவிர, இந்த நஷ்ட ஈட்டை முடிவு செய்வதிலே, குறிப்பிட்ட ஒரு பட்டாதாருக்கு கொடுத்த நஷ்ட ஈட்டை வைத்துக்கொண்டு இந்த நஷ்ட ஈடுகளையும் கணக்கிட்டால் சவுகரியமாக இருக்கும். ஆகவே இவைகளையெல்லாம் கவனித்து ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இதையெல்லாம் எதிர் பார்த்து முன்னமேயே பதில் சொல்லிவிட்டேன். இதைப்பற்றி நான் அங்கத்தினர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுவது என்னவென்றால், அவர்களுக்கு இந்த சட்டம் நன்றாகத் தெரிந்திருப்பதினால், அந்த விஷயங்களையெல்லாம் எழுதி அனுப்பினால் அதையெல்லாம் சேர்த்து ஒரு விதமாக ஒரு திருத்த மசோதா கொண்டு வரலாம்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Amendment Bill, 1961 (L.A. Bill No. 5 of 1961) as amended be passed."

The motion was put and carried and the Bill, as amended, was passed.

## (5) THE MADRAS ESTATES LAND (REDUCTION OF RENT) AMENDMENT BILL, 1961 (L.A. BILL NO. 2 OF 1961).

* THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I beg to move—

'That the Madras Estates Land (Reduction of Rent) Amendment Bill, 1961 (L.A. Bill No. 2 of 1961) be taken into consideration'.

Mr. Speaker, Sir it has become necessary to amend the Madras Estates Land (Reduction of Rent) Act, 1947, in the following circumstances :—

23rd February 1961] [Sri M. A. Manickavelu]

Under section 1 (2) of the Madras Estates Land (Reduction of Rent Act, 1947, the Act applies to all estates as defined in section 3, clause (2) of the Madras Estates Land Act, 1908, i.e., also to whole inam villages which became estates by virtue of the Madras Estates Land (Third Amendment) Act, 1936, to which the Abolition Act does not apply. The Madras Estates Land Act continues to apply to these whole inam villages and there can even now be conversions of private lands into ryoti lands under section 181 of that Act in those whole inam villages, while in the other estates to which the Abolition Act applies, there could have been or can be conversions of private lands into ryoti lands up to the date on which they were taken over or are taken over, under the Abolition Act, as the case may be. According to section 2 (2) (*a*) of the Rent Reduction Act, the Special Officer for Rent Reduction in Estates has first to determine the average rate of cash rent per acre prevailing at the commencement of the Act for each class of ryoti land in the principle village and under section 3 (3) of the Act, and order under section 3 (2) shall take effect from the commencement of fasli 1357. Thus the Rent Reduction Act would appear to apply only to the ryoti lands in an estate to which it applies, which were in existence at the commencement of the Act, i.e., which were in existence on 7th January 1948 and not to the ryoti lands which came into existence on or after that date. A doubt arose whether the Act should not be held to apply to all lands in an estate which were already ryoti lands at the commencement of the Act on 7th January 1948 or became ryoti lands up to the date of publication of the notification under section 3 (2) of the Act. But the wording of the proviso to section 3 (2) of the Act and the wording of section 2 (2) (a) of the Act do not seem to permit such an interpretation. It would be anomalous if in an estate village, for the ryoti lands in which reduced rates of rent are fixed under the Reduction of Rent Act, the landholder converts private lands into ryoti lands on or after 7th January 1948 and begins to levy any rent he likes in respect of such lands and the ryots are denied the benefit of rent reduction. This will be opposed to the scheme and intention of the Reduction of Rent Act. It was therefore suggested that the reduction of rent Act should be amended so as to make it applicable to ryoti lands in estates, to which the Act applies, which came into existence on or after 7th January 1948 and that the rates on such lands should be reduced under the Act with effect from the fasli year in which the lands were converted into ryoti lands. This suggestion ensures parity of treatment in regard to lands which became ryoti prior to 7th January 1948 or thereafter and also places the matter beyond doubt. The present Bill seeks to remove the anomalous position mentioned above by making the provisions of the Rent Reduction Act, applicable to ryoti lands in estates (to which the Act applies) which came into existence on or after 7th January 1948. The Bill does not involve expenditure from the Consolidated Fund of the State and therefore no financial memorandum is necessary under rule 89 of the Madras Assembly Rules. No memo-

[Sri M. A. Manickavelu] [23rd February 1961

randum regarding delegated legislation is necessary under rule 90 of the said rules as the Bill does not involve delegation of the legislative power.

Sir, to put in a nutshell the Rent Reduction Act applies to the lands which are ryoti on 7th January 1948, but for the lands which have been subsequently converted into ryoti lands the Act does not apply. So we are taking power to apply rent reduction even to lands which might have subsequently become ryoti lands. It is beneficial to ryots. There must be some parity. Simply because they became ryoti subsequently, why should they be denied the advantage of rent reduction? That is the object of the Bill. I request the House, Sir, that the Bill be taken into consideration.

DEPUTY SPEAKER: Motion moved—

'That the Madras Estates Land (Reduction of Rent) Amendment Bill, 1961 (L.A. Bill No. 2 of 1961) be taken into consideration.'

SRI N. K. PALANISAMI: Sir, I move that the Bill be referred to a Select Committee.

SRI S. M. ANNAMALAI: I second the amendment.

DEPUTY SPEAKER: The motion and the amendment are before the House for discussion.

**SRI N. K. PALANISAMI:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1948-ம் வருஷத்திற்கு பின்னால் ஏற்பட்ட ரயத்துக்களுக்கும் இந்த ரெண்டு ரிடக்ஷன் ஆக்ட் பொருந்தும் என்ற முறையில் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. இந்த முறையை நான் வரவேற்றாலும், இந்த மசோதா ஒரு 'காம்ப்ரெஹென்ஸிவ்' மசோதாவாக இல்லை. 1908-ம் ஆண்டில் முதல் முதலாக இந்த சட்டம் கொண்டுவரப்பட்டு விவசாயிகளுக்கு இந்த உரிமை வழங்கப்பட்டது. ஆனால் இதை எதிர்த்து ஹைகோர்ட்டு, பிரிவி கவுன்சில் இவைகளில் ஸ்டே போடப்பட்டது. அதன் பின்னாலே 1936, 1937, 1948, 1956 போன்ற வருஷங்களிலே இதற்குத் தகுந்த திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. இருந்த போதிலும், 1908-ம் வருஷத்திய சட்டத்தில் இருக்கக்கூடிய 'லாண்டு ஹோல்டர்', ரயத்துகளைப்பற்றிய ஷரத்துகளில் மாற்றம் ஏற்படாததன் காரணத்தினால் இன்னும் கோர்ட்டுகளில் விவசாயிகளுக்கு பலவித கஷ்டங்கள் ஏற்படுகின்றன. உதாரணமாக 1948-ம் வருஷத்திய எஸ்டேட் ஒழிப்பு சட்டத்தை எடுத்துக் கொண்டால் அந்த சட்டத்தில் சர்க்கார் ரெண்டு ரிடக்ஷன் மூலமாக வரி வசூல் செய்த பின்னாலும் கூட, இந்த கிராமங்கள் பூராவும் தனிப்பட்டவர்கள் கிராமங்களாக இருக்கின்றன. அந்த இனாம் பெயர் இன்னும் ஒழிக்கப்படவில்லை. அதனால் என்ன கஷ்டம் ஏற்படுகிறது என்றால். . . .

**23rd February 1961]**

DEPUTY SPEAKER : The hon. Member cannot take up the time of the House unnecessarily. These are all irrelevant points. This is a simple amending Bill and he cannot speak about some other Act. I am not going to allow him to speak on irrelevant points. I want him to confine himself to the Bill that is before the House. I want him to read the Statement of Objects and Reasons in the Bill. Without going into it the hon. Member cannot discuss irrelevant points and other Acts unnecessarily.

SRI N. K. PALANISAMI : ஆகவே, இப்படிப்பட்ட குறைபாடுகள் இருப்பதன் காரணமாக 'காம்ப்ரெஹென்ஸிவ்' பில் கொண்டு வரவேண்டும். கனம் மந்திரி அவர்கள் அம்மாதிரி ஒரு விரிவான மசோதா கொண்டுவருவதாக இரண்டு, மூன்று வருஷங்களாகச் சொல்லியும், அதற்குத் தகுந்த முறையிலே கொண்டுவரப் படவில்லை. 1956-ம் வருஷத்தில் இருந்து, ரயத்தாக புதிதாக வரக்கூடியவர்களுக்கு, இந்த வரி வசூலுக்கு ரெண்டு ரிடக்ஷன் ஆக்ட் அப்ளை செய்யப்படப்போகிறது. இதன் மூலம் 1956-ம் ஆண்டு முதல் நான்கு வருஷங்களுக்கான வரி வசூல் செய்யப்படும். அது மொத்தமாக வசூல் செய்யப்படும் என்று இருக்கிறது. அப்படி மொத்தமாக வசூல் செய்யும்பொழுது மிகவும் இடைஞ்சல் ஏற்படும். மூதலாவதாக வரி வசூல் பிரகாரம் வெள்ளைக் காகிதம் கொடுத்து, அதன் மூலம் பூரா பாக்கியையும் வட்டியுடன் வசூல் செய்வது, கொடுக்காவிட்டால் கலப்பை, மாடுகள் போன்ற பொருள்களை ஜப்தி செய்வது என்ற நிலைமை ஏற்பட்டு ராமநாதபுரம் போன்ற பல இடங்களில் பெரிய கஷ்டமாக இருக்கிறது.

DEPUTY SPEAKER : The hon. Member Sri N. K. Palanisami will please resume his seat. I am not going to allow him to speak on irrelevant points which are not before the House.

SRI N. K. PALANISAMI : Here it is clearly prescribed. . .

DEPUTY SPEAKER : His points are not clear to me.

SRI N. K. PALANISAMI : It is only to collect the rent. Please go through the Bill.

DEPUTY SPEAKER : I have gone through the Bill. If he wants to speak he can speak only on the points in the Bill.

SRI N. K. PALANISAMI : அவர்கள் ரயத்தா அல்லது ரயத்து இல்லையா என்பதைப்பற்றி கலெக்டர் முன்னால் டிக்லரேஷன் செய்ய வேண்டும். அதை ஏற்கெனவே செய்தாகிவிட்டது. அப்படி செய்யக்கூடிய சமயத்தில் அதை ஒரு குறிப்பிட்ட டயத்தில் செய்யவேண்டும் என்று இருக்கிறது ஆனால், குறிப்பிட்ட டைம் என்ன என்பது விவசாயிக்குத் தெரியாது. ஆகவே, ரயத்தா, இல்லையா என்ற பிரச்னையை 'ரீஓபன்' செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

11-30 a.m. * SRI R. SRINIVASA IYER : இந்த ஒரு சின்ன மசோதா பொறுக்குக் கமிட்டிக்குப் போகவேண்டிய அவசியமில்லே. சாஸ்வதக் குடிக்காணியாட்சி பாத்தியமுள்ள குடிகளுக்கு சௌகரியம் பண்ணிக்கொடுக்கவேண்டுமென்ற அடிப்படையில் கொண்டுவரப்பட்ட மசோதா இது. இப்பொழுதே 10, 12 வருஷங்கள் கழித்து இந்த மசோதாவைக் கொண்டுவந்திருக்கிறோம். இன்னும் கொஞ்சம் காலதாமதம் செய்யலாமென்று எதிர்கட்சிகள் சொல்லுவது விந்தையாக இருக்கிறது. குடிக்காணியாட்சி பாத்தியம் ஏற்கெனவே இருந்தால் அதற்கு சட்டம் வந்துவிட்டது, விதிகளும் போட்டாய்விட்டது. அதன்படி நடந்து வருகிறது. 1947-ம் வருஷத்துச் சட்டத்திற்குப் பிறகு ஏற்பட்ட குடிக்காணியாட்சி பாத்தியமுள்ளவர்களுக்காக இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. இதிலே ஒருசில விஷயங்களை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

ஒரு எஸ்டேட் என்று சொன்னல் இரண்டுவித அடிப்படையில் இருக்கலாம். எஸ்டேட் லாண்டு ஆக்டின்படி எஸ்டேட் ஆக இருக்கலாம் அல்லது 1936-ம் வருஷத்துச் சட்டப்படி எஸ்டேட்டாக இருக்கலாம். எஸ்டேட் இல்லாததற்கு இது பொருந்தாது. எஸ்டேட் இல்லாததற்கும் புதிதாக ஒரு சட்டம் கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எஸ்டேட்டாக இருந்தால் என்றைக்கு எஸ்டேட் ஆனதோ அன்றைக்கே குடிக்காணியாட்சி பாத்தியமும் ஏற்பட்டுவிட்டது. ரயத்வாரி நிலம் ஏற்படுவதானல், எஸ்டேட் ஆக்ட் 181-வது செக்ஷன் பிரகாரம் பிரைவேட் லாண்டு ஹோல்டர் குடிக்காணியாட்சி "கார்வ் அவுட்" பண்ணிக் கொடுத்தால்தான் வரமுடியுமென்று இருக்கிறது. அந்த வகையிலே 1947-ம் வருஷச் சட்டத்திற்குப் பிறகு வருமென்று தோன்றவில்லே. ஒரே ஒரு தீர்ப்பு ஹைகோர்ட்டிலே வந்ததாக ஞாபகம் இருக்கிறது. அது அந்தச் சட்டத்திற்குப் பிறகு வந்ததாகத் தெரிகிறது. அதற்கு இந்த ரெண்ட் ரிடக்ஷன் சட்டம் பொருந்தாது என்று இருக்கிறது. இதுமாதிரி கேஸ்கள் அபூர்வமாக இருந்தாலும்கூட குடிக்காணியாட்சி பாத்தியம் உள்ளவர்களுக்கு ஒரு நன்மை செய்யவேண்டுமென்று சொல்லும்பொழுது as a matter of abundant caution ஒரு பவர் வேண்டியதாயிருக்கிறது. "ரயட்டி" நிலம் என்றால் என்ன என்று 1908-ம் வருஷத்துச் சட்டத்திலே செக்ஷன் 3 (16)-ல் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு லாண்டுஹோல்டருக்கு ரெண்ட் கொடுத்து, குடிக்காணி பாத்தியம் ஒரு ரயத்துக்கு வந்தால் அது ரயட்டி லாண்ட் ஆகும். It will relate back to the original date when the estate was formed. ஒன்று 1908-ம் வருஷத்துச் சட்டப்படி எஸ்டேட் ஆக இருக்க வேண்டும் அல்லது 1936-ம் வருஷச் சட்டப்படி இருக்கவேண்டும். குடிகளுக்குச் சௌகரியத்தைக் கொடுக்கக்கூடிய இந்த மசோதாவிற்கு ஆட்சேபணே இருக்கத் தேவையில்லே. ஆகவே

23rd February 1961] [Sri R. Srinivasa Iyer]

இந்த மசோதா பொறுக்குக் கமிட்டிக்குப் போகவேண்டிய அவசியமில்லை என்று சொல்லிக்கொண்டு இந்த மசோதாவை ஆதரிக்கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : உதவி சபாநாயகர் அவர்களே, எனக்கு முன்பு பேசிய கனம் பட்டுக்கோட்டை அங்கத்தினர் சொன்னமாதிரி இந்த நல்ல மசோதாவை, ரயத்துகளுக்காகவே ஒரு கட்சி வைத்திருக்கிறோம் என்று சொல்லக் கூடிய ஒரு கட்சி "இந்த மசோதாவைப் பொறுக்குக் கமிட்டிக்கு விடுங்கள், கொஞ்சம் காலதாமதம் ஆகட்டும்" என்று சொல்லுவது விந்தையாக இருக்கிறது. பொது மக்களுடைய அபிப்பிராயத்திற்கு இதை விடுங்கள் என்று சொல்லாமல், பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்புங்கள் என்று சொன்னதைப் பற்றி மகிழ்ச்சியடைகிறேன். 1947-ம் வருஷத்திற்குப் பிறகு எஸ்டேட்டுகளில் கன்வெர்ஷன் இருந்தால் அவைகளுக்கு இந்த சட்டம் செல்லாது என்று நீதி மன்றம் தீர்ப்பு அளித்தவுடனேயே இதைக் கொண்டுவந்திருக்க வேண்டும். 12 ஆண்டு காலமாக நமது அரசாங்கம் தூங்கி விட்டதே என்று நினைத்து வருத்தப்படவேண்டியிருக்கிறது. இந்த நேரத்திலே, ரயத்துகளுக்கு நன்மையைச் செய்ய முன் வந்திருக்கும்பொழுது, அரசாங்கம் எதைச் செய்தாலும் அது நன்மையா, தீமையா என்று ஆராய்ந்து பார்க்காமல், எதிர்க் கட்சியினர் எதற்கும் முட்டுக்கட்டை போடுகிறார்கள் என்று புரிந்து கொள்ளுவதற்கு இப்பொழுது ஒரு வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இந்த மசோதாவை மனப்பூர்வமாக ஆதரித்து, இப்பொழுதாவது, நீதி மன்றத்தினுடைய தீர்ப்பை வைத்துக் கொண்டு மாற்றவேண்டுமென்று யோசித்தார்களே, அதைப்பற்றி மகிழ்ச்சி தெரிவித்துக்கொண்டு அதைத் துரிதமாகக் கொண்டு வருவதற்கு என்ன வழி இருக்குமோ அதைச் செய்தால் ரயத்துகளுக்கு நன்மை ஏற்படும் என்று சொல்லிக்கொள்கிறேன். இது ஒரு சிக்கலான சட்டம் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். நடைமுறையில் சிக்கல்களைத் தீர்த்துக்கொள்ள முடியும். சிக்கல்களை நீதிமன்றம் எடுத்துக்காட்டியிருக்கிறது. இவ்வளவு நாட்கள் காலதாமதம் செய்ததே தவறு. இந்த நேரத்திலாவது கொண்டு வந்திருப்பதை வரவேற்கிறேன். மேலும் காலதாமதம் செய்வது ரயத்துக்களுக்கும் நல்லதல்ல, ரயத்துகளுக்காக வாழ்கிறோம் என்று சொல்லும் கட்சிக்கும் நல்லதல்ல. ஆகவே பொறுக்குக் கமிட்டிக்கு விடவேண்டுமென்ற திருத்தத்தை கண்யமாக வாபஸ் பெற்றுக்கொண்டால் ரயத்துகளுடைய மனதில் நல்லெண்ணம் ஏற்படும் என்று சொல்லிக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தச் சட்டத்திலே கொஞ்சம் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. இரண்டு சட்டங்கள் இருக்கின்றன என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். ஒன்று 1947-ம் வருஷத்து ரென்ட் ரிடக்ஷன் சட்டம். இன்னொன்று 1948-ம் வருஷத்து ஜமீன் ஒழிப்புச் சட்டம். 1948-ம் வருஷத்துச்

[Sri M. A. Manickavelu] [23rd February 1961

சட்டப் பிரகாரம் இந்த ஜமீன்களை ஒழிப்பதற்கு நடவடிக்கை எடுப்பதற்கு முன்னே அதிகமாக வரி இருப்பதைக் குறைப்பதற்காக இந்தச் சட்டத்தை அமலுக்குக் கொண்டுவந்தார்கள். அது 1947-லே. இந்த ஒழிப்புத் திட்டத்திலே சில எஸ்டேட்டுகள்தான் வரும். சில எஸ்டேட்டுகள் எஸ்டேட் என்று பெயர் இருந்தாலும் கூட இந்த ஒழிப்புத் திட்டத்திலே வரவில்லை. அதைத்தான் 1936-ம் வருஷத்து இனாம் என்று சொல்லுவது. அது வேறு விஷயம். இந்த ஒழிப்புச் சட்டம் அமலாவதற்கு முன்பே அதிகமாக இருக்கிற வரியை ஒழிக்க 1947-ம் வருஷத்துச் சட்டம் கொண்டுவந்தார்கள். அந்தச் சட்டம் பிரகாரம் ஏற்கெனவே ரயத்துவாரி நிலமாக இருந்தால் அதற்கு இந்தச் சட்டம் பொருந்தும். ஆனால் அந்தத் தேதிக்குப் பிறகு, அதாவது 1—7—1948-க்குப் பிறகு நிலம் பிரைவேட்டாக இருந்து ரயத்துவாரி ஆகலாம். அப்படி ரயத்துவாரியானால் இந்தச் சட்டம் பொருந்துமா என்ற சந்தேகம் எழுந்தது. ஒருக்கால் இரண்டிற்கும் பொருந்தும் என்று நினைத்திருக்கலாம். பொருந்துமா, பொருந்தாதா என்ற சந்தேகம் ஏற்பட்டதினாலே, பிரைவேட்டாக இருந்து ரயத்துவாரியான நிலத்திற்கு இந்த ரென்ட் ரிடக்ஷன் சட்டத்தைப் பிரயோகிக்கவேண்டுமென்ற தாத்பர்யத்தில் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. இம்மாதிரி எஸ்டேட்டுகள் ஒன்றிரண்டு இருக்கலாம். அவைகளுக்கும் இந்த அனுகூலம் கிடைக்கவேண்டுமென்பதுதான் நோக்கம். இந்த மசோதாவைப் பொறுக்குக் கமிட்டிக்கு விடவேண்டிய அவசியமில்லை. இது ஒரு சின்ன விஷயம். இப்படியே சட்டத்தை நிறைவேற்றலாமென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

The amendment was, by leave, withdrawn.

DEPUTY SPEAKER : The question is—

"The Madras Estates Land (Reduction of Rent) Amendment Bill, 1961 (L.A. Bill No. 2 of 1961) be taken into consideration."

**The motion was put and carried and the Bill was taken into consideration.**

**Clause 2 was put and carried.**

***Clause 3*** :

DEPUTY SPEAKER : The motion is—

"**That clause 3 do stand part of the Bill.**"

SRI N. K. PALANISAMI : Sir, I move—

"In the proposed amendment to section 3, Madras Act XXX of 1947, in item (iv) (a), insert the following as provisos :

'Provided that such arrears of rent shall be recovered in 6 annual instalments;

23rd February 1961] [Sri N. K. Palanisami]

Provided further that the Collector may in his discretion allow any remission thereof in respect of any lean agricultural year'."

The amendment was duly seconded.

SRI R. SRINIVASA IYER : Sir, this amendment is not within the scope of the Bill. அர்ரியர்ஸ் பற்றி பழைய ஆக்டிலேயே இருக்கிறது.

DEPUTY SPEAKER : The hon. Member wants to add a proviso. But the hon. Member Sri Palanisami should know that there is a provision in the main Act and therefore there is no need for the amendment. If he has got the original Act he may go through it or he may get a copy from the Secretary.

SRI N. K. PALANISAMI : Sir, I have seen it.

SRI S. LAZAR : Sir, let Mr. Palanisami read his amendment.

DEPUTY SPEAKER : All right. Let him speak now.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது சர்க்கார் கொண்டு வந்திருக்கக்கூடிய மசோதா பிரகாரம் ரயத்தி லாண்டுகளுக்கு வரி விதிக்கும்போது 1337-ம் பசலியிலிருந்து அதாவது 1956-ம் வருஷத்திலிருந்து இது வரையிலும் வரி வசூல் செய்வதாகச் சொல்லப்படுகிறது. அப்படியென்றால் கிட்டத்தட்ட நான்கு வருஷ வரி பூராவும் ஒரே தடவையில் வசூல் பண்ணுவதாக இருக்கும். அப்படி இருக்கக் கூடாது. முதலில் அந்த முறை இல்லாமல் அந்த பாக்கியை எல்லாம் ரத்து செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அல்லது அந்த பாக்கியை ஆறு வருஷ தவணையிலாவது வசூல் செய்வதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளும் அளவில் திருத்தம் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அது மட்டுமல்ல பல வருஷ வரியை வசூல் செய்யும்போது, பல வருஷங்களாக போதுமான மழை இல்லாமல் பயிர்கள் எல்லாம் கெட்டிருக்கின்றன. அதைப்பற்றி கலெக்டருக்கு தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அவைகளுக்கு எல்லாம் ரெமிஷன் கொடுக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். அவைகளை வற்புறுத்துவதற்குத்தான் நான் இந்த திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். ஆகவே என்னுடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, the main object of the Bill is to apply the rent reduction to the lands converted into ryoti lands later on. As for the payment of rent, there is what is called 'kistbandi', that is, the rent normally due is paid in so many instalments in January, February, March. etc. But there is no provision for the arrears of rent to be paid in instalments. What the hon. Member wants is that even the arrears should be paid in instalments and there is no scope for that, but,

for ordinary normal rent there is the 'kistbandi'. After all, we are reducing the rent and even for that he wants all these privileges and that is not within the scope of the Bill. So, I cannot accept his amendment.

The amendment was put and lost.

Clause 3 was put and carried.

Clauses 4, 5 and 1 were put and carried.

*The Preamble.*

DEPUTY SPEAKER: The motion is—

'That the Preamble do stand part of the Bill.'

THE HON. SRI M. A. MANICKAVELU: Sir, I move the following amendment:—

'In the Preamble, for the words "Eleventh Year", substitute the words "Twelfth Year".'

DEPUTY SPEAKER: The question is—

'In the Preamble, for the words "Eleventh Year", substitute the words "Twelfth Year".

The amendment was put and carried.

The Preamble as amended was put and carried.

THE HON. SRI M. A. MANICKAVELU: Sir, I move—

'That the Madras Estates Land (Reduction of Rent) Amendment Bill, 1961 (L.A. Bill No. 2 of 1961) as amended be passed.'

DEPUTY SPEAKER: The question is—

'That the Madras Estates Land (Reduction of Rent) Amendment Bill, 1961 (L.A. Bill No. 2 of 1961) as amended be passed'.

The motion was put and carried and the Bill as amended was passed.

(6) THE TRAVANCORE–COCHIN AGRICULTURAL INCOME-TAX (MADRAS AMENDMENT BILL, 1961 (L.A. BILL NO. 3 OF 1961)

THE HON. SRI M. A. MANICKAVELU: Sir, I move:—

"That the Travancore-Cochin Agricultural Income-tax (Madras Amendment) Bill, 1961 (L.A. Bill No. 3 of 1961), be taken into consideration".

The Travancore-Cochin Agricultural Income-tax Act, 1950 (Travancore–Cochin Act XXII of 1950) is in force in the Kanyakumari district and the Shencottah Taluk of the Tirunelveli district. There is no provision in the Travancore–Cochin Act for the collection of the admitted tax in a summary manner in advance of